உ

சிவமயம்.

# சைவபோதம்

## முதற்புத்தகம்



சு. சிவபாதசுந்தரம் B. A.

செய்தது

இஃது

யாழ்ப்பாணம்

சைவபரிபாலன சபையாரால்

தமது

சைவப்பிரகாச யந்திரசாலையில்

அச்சிடப்பெற்றது.

12-ம் பதிப்பு.



விஷு ஆண்டு கார்த்திகைமீ

1941.

# உபாத்தியாயர்களுக்கு அறிவிப்பு

சமயக் கல்வி பள்ளிக்கூடங்களிலே ஒரு வாரத்தில் இரண்டரை மணிப் போதுக்குக் குறையாமல் நடைபெறுகின்றது; இதில் ஒன்றரை மணிப்போது இந்தப் புத்தகமும், அரைமணி சைவ வினாவிடையும், அரைமணி தோத்திரமும் படிப்பிக்கப்படலாம். இந்தப் புத்தகத்தில் ஒரு பாடம் பெரும்பாலும் ஒரு வாரத்துக்குப் போதியதாகும். பிள்ளைகள் சுலபமாக விளங்குதற்காக உபாத்தியாயர் கதைச் சுருக்கத்தை ஐந்து நிமிஷத்திற் சொல்லிவிட, கதையை ஞாபகப்படுத்துதற்காக அவர்கள் பல முறை வாசித்த பின், அதிலுள்ள சமய உண்மைகளை உணர்த்துதற்காக உபாத்தியாயர் பதினைந்து அல்லது இருபது நிமிஷம் கேள்வி கேட்பது முறையாகும். முதற் பாடத்திலே கேட்கவேண்டிய அவசியமான வினாக்கள் பின் வருமாறு: (இப்படியே மற்றையவைகளிலும் வினாவுக.)

1. சிவபெருமான் எப்படிப்பட்டவர் என்று வேதங்கள் சொல்லுகின்றன?
2. ஏன் அப்படிச் சொல்லுகின்றன?
3. கடவுளுக்குச் சரீரமாயுள்ளவை எவை?
4. உன்னுடைய சரீரத்தைப் பிறர் வருத்துவது உனக்குப் பிரியமா?
5. நாம் உயிர்களை வருத்துவது கடவுளுக்குப் பிரியமாயிருக்குமா?

6. ஆடு கோழி முதலியவைகளைக் கொல்லலாமா?

7. மாடு குதிரை முதலியவற்றிற்கு உணவு கொடாது வேலை செய்விக்கலாமா? அவைகளுக்கு அடிக்கலாமா?

8. பிற உயிர்களுக்கு நாம் என்ன செய்தாற் கடவுளுக்குப் பிரியமாய் இருக்கும்?

9. நாய், பூனை முதலியவைகளை நாம் நேசிக்க வேண்டுமாயினும் அவைகளை மார்பிலே அணைத்து நாம் உண்ணும்போது நமது இலையிலே உணவு கொடுத்தல் சரியா?

*குறிப்பு:— இந்தக் கதைகளிலே சிவபெருமான் என்றது அவருடைய திருவருள் வடிவங்களாம். நான்காம்பாடத்திலே சிவபெருமான் அணையை "வேண்டிய அளவுக்கு உயர்த்திவிட்ட"படியால், அதிகாரிகள் தண்டிக்க நினைத்தது தவறு. ஐந்தாம் பாடத்திலே சிவபெருமான், பத்திரனுடைய வேலைக்காரனென்றது, அவர் அடியார்களுக்கு வேண்டியவெல்லாம் செய்தலாலென்றறிக. பதினெட்டாம் பாடத்திலே சிவபெருமான் ஒன்றும் உண்பவரல்லராதலால், "நான் ஒருகாலமும் உண்ணாத ஆகாரம்" என்றார்.*

---

உ

சிவமயம்

## ஸேர். பொன். இராமநாததுரை KT. K.C.

எழுதிய

# பாயிரம்

—:—

**"சைவ போதம்"** என்று கூறப்பட்ட இந்நூல் சிவபெருமான் ஆன்மகோடிகளை எவ்விதம் இரக்ஷித்து வருகிறாரென்று விளக்குகின்றது.

சகல வஸ்துக்களுக்குள்ளிருந்தும், அவற்றுக் கப்பாற்பட்டும் தமது அன்புச் சொரூபத்தையும் அறிவுச் சொரூபத்தையும் மாறவிடாமல் யாவற்றையும் அடக்கியாண்டு, ஆன்மாக்களுடைய சுகத்தைக் கருதிப் பஞ்சகிருத்தியங்களை நடத்தியருளும் சிவபெருமான் 'கடவுள்' எனப்படுவர்.

அவரது இலக்கணங்களையும் சநாதன தர்மங்களையும் எடுத்துக் கூறுத லரிதாயினும், அவற்றிற் சில இந்நூலிற் பின்வருமாறு விளக்கப்பட்டன:

1 கடவுள் அன்பு நிறைந்தவர் (பாடம் 1, 6)

2 கடவுள் எங்குமுள்ளவர் (பா. 1, 4)

3 கடவுள் உயிர்க்கு உயிராயுள்ளவர் (பா. 13)

4 கடவுள் அடியார்க்கு எளியவர் (பா. 2, 4)

5 கடவுள் ஆன்மாவை என்றுங்காக்கிறார்; உடம்பு அழிவுக்கு உரிய பொருள் (பா. 13)

6 கடவுளை நம்பினோர்க்கு ஒரு குறையுமில்லை. (பா. 1,9,15)

7 கடவுள் வழிபாடு அவசியம் வேண்டற்பாலது (7,10,12,13)

8 கடவுள் வழிபாட்டினாலே பழவினைப்பயனை வெல்லலாம் (7)

9 கடவுள் வழிபாடே உபவாசவிரதத்தின் முக்கியஅங்கம் (20)

10 அகந்தை மமதைகள், துஷ்ட நினைவுகள், விஷய சுக மோகங்கள், அநித்திய வஸ்துவிலுள்ள பற்றுக்கள் ஆகிய மலங்கள் யாவற்றையும் சிவபெருமான் நீக்குவராதலால் அந்த அனுக்கிரகத்தை உணர்த்தும் திருநீறு வணங்கப்படத்தக்கது. (பா. 10, 11)

11 திருக்கோயிலிலே தொண்டு செய்தல் தாச மார்க்கத்தாருக்குப் பெரும் புண்ணிய கருமம். (பா. 10, 12)

12 ஆன்மலாப முயற்சியிலே சரீர வருத்தஞ் சற்றேனும் நினைக்கப்படத் தக்கதன்று.

13 அநித்தியப் பொருள்களுக்காகச் சமயத்தை விடலாகாது; (பா. 23) தாயும் பிள்ளையும், தந்தையும் பிள்ளையும், உபாத்தியாயரும் மாணவனும், பதியும் பத்தினியும் ஆதிய சம்பந்தங்களிலே தாய் தந்தை உபாத்தியாயர் பதி ஆகிய இவர்கள் அன்பே சொரூபமாயும், அறிவே சொருபமாயும் இருத்தலினால் இவர்கள் வழிபடத்தக்கவர்கள்.

14 தாயை வழிபடல் (பா. 14, 16)

15 தந்தையை வழிபடல் (பா. 16)

16 உபாத்தியாயரை வழிபடல் (பா. 24)

17 பதியை வழிபடல் (பா. 21)

18 சிவகாருண்யத்தை அபிவிருத்தி செய்தல் வேண்டும். (பா. 1, 18, 32)

19 நமக்குத் தீங்கு செய்கிறவர்களுக்கும் நாம் நன்மை செய்தல் வேண்டும். (பா. 11, 13, 32)

20 தனக்கு வருந் துன்பங்களை மிகப் பாராட்டாமற் பொறுத்துக் கொள்ளுதல் 'தபஸ்' என்னும் பெருங்குணம் (பா. 19)

21 அகந்தை மமதை அற்ற தன்மை உத்தம குணம்; இதுவே தாழ்மை (பா. 21)

22 பழிப்பன பகரேல் (பா. 20)

23 மதுபானம் சரீரத்தையும் நல்லொழுக்கத்தையுங் கெடுக்கும் (பா. 24, 25)

24 நேர்மையாக இருத்தல் வேண்டும் (பா. 19, 27, 29, 30)

25 திருநீற்றை அவமதித்தால் தீமை உண்டாகும் (பா. 26, 27)

26 பிற உயிர்களுக்குத் துன்பஞ் செய்யலாகாது (பா. 28, 29)

27 மிருக பலி பெரும் பாதகம் (பா. 28, 29)

28 நமக்கு அதிகாரம் வந்த காலத்திலே நமது இலாபத்தைக் கருதாமற் பிறருடைய நன்மையையே கருதல் வேண்டும். (பாடம் 31)

30 பிறருக்காக நாம் வருந்தல் வேண்டும். (பா. 32)

இந்நூல் சைவ வித்தியாசாலைகள் யாவற்றிலும் போதிக்கப்படத் தக்கது.



## முகவுரை

சமயத்தின் நோக்கம் ஆன்மா கடவுளைப் பற்றுதலாம். இதற்கு இன்றியமையாத சாதனம் ஆன்மா கடவுளிற் பற்று வைத்தல். நாம் நல்லவரொருவரைப் பலமுறையுங் கண்டு பேசிக் கூடித் திரிதலால், அவரிலே நமக்குப் பற்று வளர்வதுபோல, கடவுளைக் காலையிலும் மாலையிலும் வேறு வேறு நேரங்களிலும் அன்போடு தியானிப்பதாலும், கோயில் வழிபாட்டினாலும், திருத்தொண்டுகள் செய்வதனாலும் கடவுளிலேயுள்ள பற்றை வளர்த்துக்கொள்ளுதல் சாலும். சிறு வயதிலே பழகிய பழக்கம் நிலைக்கத்தக்கதாதலால், இந்தப் பழக்கங்களைச் சிறுவருக்குப் பழக்குவது ஐங்குரவருக்கு முள்ள கடனாகும். இவை தவிர, சிவபிரானது திருவருளையும் சிவனடியாரது திடபத்தியையும், புண்ணியமான செயல்களையும் விளக்குங் கதைகளும் கடவுளிலே உள்ள பற்றை வளர்ப்பனவாம். இப்படியான கதைகளைப் படிப்பிக்க வேண்டிய உபாத்தியாயர்களுடைய வேலையைச் சுருக்குதற்காக இந்தப் புத்தகம் கதை ரூபமாய் எழுதப்பட்டது.

இதிலுள்ள கதைகள் பெரும்பாலும் பழமையானவை. வடமொழியிலுள்ள முதனூற் கதைகளுக்கும் தென்மொழியிலுள்ள வழிநூற் கதைகளுக்கும் இடையிடையே வேறுபாடுகளிருத்தலைக்கண்டு, இதிலுள்ள கதைகள் சில அவற்றினின்றும் வேறுபடுதலை ஆன்றோர் பொறுப்பர்.

சமயக் கல்விக்குக் காலம் பெறும் பள்ளிக்கூடங்களிலே, தமிழ் நான்காம் வகுப்பிலும் இங்கிலிஷ் முதலாமாண்டு வகுப்பிலும் கற்கும் மாணுக்கர்கள் இப் புத்தகம் கற்கத்தக்கவர்கள். ஏனைய பள்ளிக்கூடங்களிலே இது நான்காம் வகுப்புப் புத்தகங்களில் ஒன்ருகப் போதிக்கப்படலாம். இது சிறுவர்களுக்கு மாத்திரமன்றிப் பொதுவாகக் கதைகளிற் பிரியமுள்ள ஏனையோருக்கும் பயன்படும்.

இப்படியான ஒரு புத்தகம் அறிவிற் சிறந்தவராய்ப் பத்திமானுயுள்ள ஒருவரால் எழுதப்பட்டாற் குறைகளில்லாததாய் இருக்கும். அப்படியான ஒருவரால் இனியாவது ஒன்று எழுதப்படவேண்டுமென்று யாவரும் விரும்பவேண்டும். அறிவாளர்கள் இதிலேயுள்ள குற்றங்களை எடுத்துக் காட்டுவார்களானுல் இதற்குப் பேருந் துணைபுரிபவராவர்.

சு. சி.



உ

சிவமயம்

# சைவபோதம்

## முதற் புத்தகம்

### சிவபெருமான் பன்றிக்குட்டிகளுக்குப் பால் கொடுத்தமை

தென் இந்தியாவிலே மதுரை என்னும் ஒருநகரம் உண்டு. அதற்கு அயலில் ஒரு காடு இருந்தது. அந்தக் காட்டிலே ஒருநாள் ஒருபன்றி கொல்லப்பட்டது. அந்தப் பன்றிக்குப் பன்னிரண்டு குட்டிகள் இருந்தன. தாய்ப் பன்றி செத்துப் போனுற் குட்டிகள் எவ்வளவு பாடுபடும். அவற்றுக்குப் பசி தீர்ப்பவர் யார்? துணையாவார் யார்? அவை வெயிற் சூட்டினுல் வருத்தப்பட்டன; பசியால் தவித்துத் தம் தாயைக் காணுமல் மனங் கலங்கின.

அவை வருந்தியதைப் பரம பிதாவாகிய சிவபெருமான் கண்டார்; அவை முற்பிறவிகளிலே புண்ணியங்கள் செய்திருந்தமையினுற் போலும் அவற்றினுடைய தாய்ப் பன்றிபோல உருவங்

கொண்டு அவற்றுக்குப் பக்கலிற் போய்க் கிடந்தார். அவை அதைக் கண்டவுடனே துன்ப மெல்லாந் தீர்ந்து, சந்தோஷத்துடன் பால் குடித்துவிட்டுச் சிவபெருமானுகிய தாய்ப் பன்றிக்கு மேலே ஏறித் துள்ளி விளையாடின.

"ஆயினும், எல்லாப் பிராணிகளுள்ளும் பன்றியே மிகவும் அருவருக்கத் தக்க மிருகம்; அப்படியான மிருகங்கள் சிவபெருமானுடைய திருமேனியிலே முட்டலாமா?" என்று நீங்கள் கேட்கக் கூடும். அதற்கு மறுமொழி சிவபெருமான் சொல்லியிருக்கின்ருர்.

"நாம் எல்லா உயிர்களிலும் மிகுந்த அன்பாய் இருத்தலினுலேதான், வேதங்கள் ஆகமங்க ளெல்லாம் எம்மைச் சர்வ சீவ தயாபரன் என்று சொல்லுகின்றன. ஒரு மனிதனுக்கு அவனது உடம்பிலுள்ள எல்லா அங்கங்களும் தம்முள் ஒத்த விதமாகப் பேணத் தக்கவையே. சுத்தமில்லாத இடங்களிலே மிதிக்கின்ற காலும் அவனுக்குத் தேவைதான்; மிகச் சிறந்த கண்ணும் அவனுக்குத் தேவையே; காலிலே ஒருவருத்தம் வந்தால்; இது இழிவான கால்தானே என்றெண்ணி



அந்த வருத்தத்தைத் தீர்க்காமல் விடுவானு? இல்லையே.

அதுபோலவே எம்முடைய காரியமும். எல்லா வுலகங்களும் அவற்றிலுள்ள உயிர்களும் எமக்குச் சரீரமாய் இருக்கின்றன; ஒருவன் தன்னுடைய சரீரத்தின் எல்லா அவயவங்களிலும் எவ்வளவு அவதானமாய் இருக்கிருனே, அவ்வளவாக நாம் உலகத்திலேயுள்ள உயிர்கள் எல்லாவற்றிலும் அவதானமாயும் அன்பாயும் இருக்கிரும். எல்லா உயிர்களும் எமது அருட் செயலுக்குத் தம்முள் ஒப்ப உரியனவே. ஆதலின், பன்றியும் பசுவும் எமக்கு ஒரு தன்மையானவையே."

"ஏனக் குருளைக் கருளினை போற்றி"

## உ. சிவபெருமான் தாயானமை

தென் இந்தியாவிலே திரிசிராப்பள்ளி என்று ஒரு பட்டணம் இருக்கிறது. அங்கே ஒரு மலையிலே ஒரு பழமையான சிவன் கோயில் உண்டு. அதற்கு வடக்கே மூன்று மைல் தூரத்திற்கு அப்பால் திருவானைக்கா என்னும் ஒரு கிராமம் உண்டு.

அந்தக் கிராமத்திலே முன்னொரு காலத்தில் வயதுபோன ஒரு செட்டிச்சி

யம்மையார் இருந்தார். அவர் கடவுளிலே மிகுந்த அன்புள்ளவர். அவருக்கு ஒரு மகள் இருந்தாள். அந்த மகள் பிள்ளை பெறுதற்காகத் தாயார் வீட்டில் வந்திருந்தாள்.

அம்மையார் திரிசிராப்பள்ளியில் இருக்கும் கோயிலுக்கு ஒவ்வொருநாளும் பூமாலை கட்டிக்கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு வீட்டுக்குத் திரும்புவது வழக்கம். அவர் கோயிலுக்குப் போகும் வழியிலே காவிரி என்னும் ஆறு பாய்கிறது. ஒரு நாள் அவர் வழக்கப்படி பூமாலை கட்டிக் கொடுத்துவிட்டு வீட்டுக்குத் திரும்பி வரும்போது ஆறு மிகவும் பெருகிப் பாய்ந்தது.

ஆற்றைக் கடக்க ஒருவரும் ஓடம்விட முடியாமல் இருந்தனர். ஆதலால் அவர் வீட்டுக்குப் போக இயலாமல் இருந்தார். அவர் அன்றைக்கு வீட்டை விட்டுப் புறப்படும்பொழுது, கருப்பவதியா யிருந்த அவருடைய மகளுக்குப் பிள்ளைபெறுகிற வேதனை தொடங்கிவிட்டது; ஆயினும், சுவாமிக்குச் செய்யவேண்டிய தொண்டு ஒரு காலத்துந் தவறக்கூடாதல்லவா? ஆனபடியால் அவர் கோயிலுக்குப் போய்



மீளலாயினர். ஆற்றங் கரையிலே நின்று, பின்னர்த் தம்முடைய மகளின் நிலைமையை நினைந்து நினைந்து அம்மையார் மிகவுந் துக்கப்படுவாராயினர்; ஆறு மேலும் மேலும் பெருகியதல்லாமற் குறையவில்லை "என்னுடைய மகளைக் காப்பாற்ற என்னால் இயலுமா? கடவுளல்லவா காப்பாற்றுகிறவர். அவருக்குத் திருவுளமிருந்தால் என்னுடைய மகளுக்கு ஒரு குறையும் வராது" என்று அம்மையார் எண்ணி, மனத்தை ஒருவாறு ஆற்றிக்கொண்டார்.

பிள்ளை பெறுகிற வேதனையால் வருந்தும் அவர் மகளுக்கு அங்கே உதவி செய்வார் பிறர் ஒருவருமில்லை. அவருடைய குடிசையோ தனிமையானது. மகளினுடைய வருத்தம் மேன்மேல் அதிகரித்தது. இந்தச் சரீர வேதனையோடு, தனது தாயார் வரவில்லையே, அவருக்கு என்ன பொல்லாங்கு நேர்ந்ததோ என்ற மனவேதனையுஞ் சேர, தாங்க முடியாத துயரத்திற் கிடந்து மகள் வருந்தினாள்.

அவள் அப்படி வருந்தும்போது, ஒரு கிழவி அவளிடம் வந்தாள். அந்தக் கிழவி தோற்றத்தில் முழுவதும் அவளுடைய தாயார்போலவே இருந்தாள். மகள் அந்தக்

கிழவியைத் தன் தாய் என்றே நினைத்தாள். தாயாரைக் கண்டவுடன் உண்டான சந்தோஷத்தினால் அவளுடைய வேதனை எவ்வளவோ குறைந்தது. அந்தக் கிழவி அவளுக்கு என்ன என்ன பரிகாரஞ் செய்ய வேண்டுமோ அவற்றை யெல்லாம் விரைவாகச் செய்தாள்; பிள்ளை சுகமாகப் பிறந்தது. அதன் பின்பு அவள் செய்ய வேண்டிய சுத்திகள் யாவையுஞ் செய்தாள்; தாயையும் பிள்ளையையும் வெந்நீரிலே குளிக்கவார்த்தாள்; அவளுக்கு வேண்டிய ஆகாரங்களையும், கஷாயங்களையும் வைத்துக் கொடுத்தாள். இப்படி மூன்று நாளாக அந்தக் கிழவி அங்கே துணையாக இருந்தாள்.

மூன்று நாளிலே காவிரியாற்றுப் பெருக்குக் குறைந்துவிட்டது. அதன் பின்புதான் ஆற்றுக்கு அக்கரையிலிருந்து அம்மையார் வீட்டிற்கு வரக்கூடியதாயிருந்தது; 'மகளுடைய காரியம் எப்படியோ? அவளுடைய வேதனை எவ்வளவில் இருக்கின்றதோ?' என்று அறிதற்கு மிகுந்த ஆவலோடு வீட்டுக்கு வந்தார். அவர் வீட்டு வாயிலினுள்ளே வரவும் மகளுக்குத் துணையாய் இருந்த கிழவி மறைந்துவிட்டாள்.



அம்மையார் வீட்டினுள் வந்து மகளையும் பிள்ளையையுங் கண்டு சந்தோஷங்கொண்டு, "மகளே, உனக்கு இந்த ஆபத்துக் காலத்தில் உதவி செய்தவர் யாவர்? அவர் எங்கிருந்து வந்தார்? அவர் இப்போது எங்கே?" என்று கண்களில் ஆனந்த நீர் சொரிய ஆவலோடு கேட்டார். அதற்கு மகள், "அம்மா, நீங்கள் தாமே என்னுடன் இருந்தீர்கள்; எனக்கு ஆக வேண்டிய வெல்லாம் செய்துவிட்டு, யார் துணை செய்தாரென்று கேட்கிறீர்களே! உங்களுடைய கேள்வி என்ன? உங்களைப் போல் இந்த ஊரில் வேறொருவர் இருக்கின்றாரா?" என்றாள்.

இதைக் கேட்ட தாயார், "இது சிவபெருமானுடைய திருவருள்தான்; கடவுளேயன்றி இது செய்ய வல்லவர் யாவர்? எம்பெருமான் எம்மிலே இவ்வளவு அன்புள்ளவரா! அவர் தாயாக வந்து இவ்வளவு வேலையெல்லாம் உனக்குச் செய்ய, நீ எவ்வளவு புண்ணியஞ் செய்திருக்க வேண்டும்!" என்று சொல்லிச் சிவபெருமானுடைய திருவருளை வியந்தார்.

அன்றுமுதல், அவ் வம்மையாரின் தொண்டினால் இரங்கிய அக் கோயிலி

லுள்ள சுவாமிக்குத் தாயுமான சுவாமி என்ற திருநாமம் வழங்கி வருகின்றது. அம்மையார் பின்பும் தமது திருத்தொண்டை இடைவிடாது செய்து சுவாமியுடைய பதவியைப் பெற்றார். அவ்வம்மையார் பேரால் இன்றைக்கும் தாயுமான சுவாமி கோயிலில் ஒரு திருவிழா நடைபெறுகின்றது.

---

## ௩. சிவபெருமான் மண் சுமந்தமை

மதுரைக்குப் பக்கத்திலே வைகை என்னும் ஆறு பாய்கிறது. அந்த ஆறு முன்னொரு காலத்திலே மிகவும் பெருகி, வயல்கள் சோலைகள் முதலிய இடங்களையெல்லாம் அழித்து அந் நகரத்தின் மதிலைக் கிட்டி வந்தது. சனங்களெல்லாம் அதைக்கண்டு பயந்து கலக்கமடைந்தார்கள். ஆற்றுக்கு அணைகட்டி அதைத் தடுக்காவிட்டால், அது பட்டணத்துக்குள் வந்துவிடும்; வீடு வாயில்களை அழிக்கும்; மாடு ஆடுகளை வாரிக்கொண்டுபோய்விடும்; சனங்கள் அமிழ்ந்தி இறந்துபோவார்கள். ஆதலாற் சனங்கள் தங்களைக் காக்கும் அரசனாகிய பாண்டியனிடம் போய்த் தங்களுக்கு நேர்ந்த ஆபத்தைத் தெரிவித்தார்கள்.



அரசன் மந்திரிமாருடன் அவ்விடத்திற்குச் சென்றான். ஆறு பெருகி ஊரை அழிப்பதைக் கண்டு, அரசன் மந்திரிமாரைப் பார்த்து, "கடவுளுடைய பூசைகளிலே ஏதுங் குறைவு நேர்ந்ததோ? அல்லது சிவனடியார்களுக்கு யாதுங் குறை செய்தேனோ? என்ன காரணத்தால் என்னுடைய குடிகளுக்கு இவ்வளவு தீமை வந்தது?" என்று சொல்லித் துக்கப்பட்டான்.

பின்பு, அரசன் தூதர்களை நோக்கி, "நம்முடைய ஊரிலுள்ள சனங்களெல்லாரையும் வைகையாற்றங் கரைக்கு அணை கட்ட வரும்படி பறை யடிப்பியுங்கள்" என்று கட்டளையிட்டான். அவர்களும் அப்படியே செய்தார்கள். உடனே அவ்வூரிலுள்ள சனங்களெல்லாருங் கூரிய மண்வெட்டிகளும், பெரியகூடைகளும், சும்மாடுகளுங்கொண்டு வைகைக் கரைக்குச் சென்றார்கள். ஒவ்வொருவருக்கும் அடைக்க வேண்டும் பகுதி அளந்து விடப்பட்டது.

அவ்வூரிலே பிட்டு விற்றுச் சீவனஞ் செய்யும் செம்மனச்செல்வி யென்னும் வயதுபோன ஒரு அம்மையார் இருந்தார். அவருக்குத் தாயுமில்லை; தந்தையுமில்லை; பிள்ளைகளும் இல்லை; வேறு இனத்தவர்

களுமில்லை; தனித்தவராக இருந்தார். ஆயினும், அவர் எல்லாம் வல்ல சிவபெருமானிடத்து அளவில்லாத பத்தியும் இடையருத தியானமும் உடையவர்; அவருடைய பங்கை அணை கட்டுதற்கு ஒருவருமில்லை. அந்தப் பங்கு அணை கட்டப்படாம லிருந்தால் அரசனுடைய சேவகர் அவரை வருத்துவர். ஆதலால், அம்மையார் தெருக்கøளெல்லாம் போய்க் "கூலிக்குப் பிட்டுத் தருவேன்; யாராவது என்னுடைய பங்கைக் கட்டுவீர்களா?" என்று கேட்டார். ஒருவருஞ் சம்மதிக்கவில்லை.

அம்மையார் யாதொரு வழியுமின்றி மனங் கலங்கினர்; கண்ணீர் தாரை தாரையாகச் சொரியச் சோமசுந்தரக் கடவுளின் கோயிலுக்குச் சென்றார். அங்குச் சுவாமிக்கு முன்பாகப் போய், "சுவாமி, என்னை இவ்வாபத்தில் நின்றும் நீக்குவார் ஒருவர் இல்லையே! தேவரீருடைய கிருபையாற் பிட்டு விற்றுச் சீவிக்கும் எனக்கும் இத்துன்பம் வரலாமோ? தேவரீர் என்னுடைய மனத்துயரத்தைத் தீராவிட்டால், நான் வேறு யாரிடஞ் சொல்லுவேன்" என்று அழுதுவிட்டுப் போனர்.

சிவபெருமான் அம்மையார்மேல் இரங்கி அவரைக் காக்கத் திருவுளங் கொண்டார்.



சுவாமி, ஒரு கூலியாளைப் போலக் கந்தைத் துணி உடுத்துத் தலையிற் கூடையும் தோளில் மண்வெட்டியுங் கொண்டு அம்மையார் இருந்த வாயிலில் வந்து "கூலியாள் வேண்டியவர் யாருமுண்டோ?" என்று வினவினர். அம்மையார் வெளியே வந்து, "எனக்குக் கூலியாள் வேண்டும்; வருவாயா?" என்று கேட்டார். அதற்குக் கூலியாளர் "எனக்கு முற்கூலி தருவாயாயின் வருவேன்" என்றார்.

---

## ௬. சிவபெருமான் மண்சுமந்தமை II

அம்மையார், "நீ இப்போது உண்ணுகிறதற்குப் பிட்டுத் தருவேன்; இல்லையேற் பிட்டை விற்றுப் பின்னேரம் கூலி கொடுப்பேன்" என்றார். கூலியாளர், "என்னுடைய கூலியாகப் பிட்டை இப்போது தருவாயாயின் நான் அதை உண்டு விட்டு உன்னுடைய வேலையைச் செய்வேன்" என்றார். அம்மையார் அதற்குச் சம்மதித்து உதிர்ந்தபிட்டு முழுவதையுங் கூலியாளருக்குக் கொடுத்தார். சிவபெருமானாகிய கூலியாளர், "இன்னும் வேண்டும்; இன்னும் வேண்டும்" என்று அம்மையாருடைய பிட்டை மேலும்மேலும் வாங்கித் தின்றார். எஞ்சியதை வேலை

செய்யும்பொழுது உண்ணுதற்காகத் தமது கந்தைத் துணியிலே முடிந்து கொண்டு போனார்.

அவர் ஆற்றங்கரைக்குப் போய் அம்மையாருடைய பாகத்தைக் காட்டும்படி அவரைக் கேட்டார். அம்மையார் அளந்து விடப்பட்ட பங்கைக் காட்டி, "தம்பீ, இந்தப் பங்கினை அடைத்து விடு" என்று சொன்னார். சுவாமி அம்மையாரைப் பார்த்து, "நான் உம்முடைய பாகத்தை இதோ அடைக்கின்றேன்; யாதொன்றுக்கும் பயப்பட வேண்டாம்; நீர் போம்" என்று சொல்லி அனுப்பினார். அம்மையார் வீட்டிற்குப் போய்விட்டார். கூலியாளர் வேலையை ஒழுங்காகச் செய்யவில்லை. இடையிடையே விளையாடுவதும், இடையிடையே மண் கொண்டுபோய்க் கரையிற் போடுவதுமாய் இருந்தார். ஆயினும், அணையை வேண்டிய அளவிற்கு உயர்த்தி விட்டார்.

பின்பு, அவர் இளைத்தவர்போல, கூடையைத் தலையணையாக வைத்துக் கொண்டு, கொன்றைமர நீழலிலே படுத்து நித்திரை செய்பவர்போலக் கிடந்தார். அப்பொழுது அரசனுடைய அதிகாரிகள்



அங்கே வந்தார்கள்; அவர்கள் தங்கள் ஏவலாளர்களை நோக்கி, "எல்லாரும் தங்கள் பங்குகளைக் கட்டி முடித்தார்களா என்று பார்த்து வாருங்கள்" எனக் கட்டளை யிட்டார்கள். ஏவலாளர் போய் எல்லா இடங்களையும் பார்த்தனர். எங்கும் மிகஉயரமாகக் கட்டப்பட்டிருந்தது. ஆனால் ஒருபங்கு மாத்திரம் மற்றையவைகளிலுஞ் சிறிது தாழ்ந்திருக்கக் கண்டார்கள். அப்போது, "இது யாருடைய பங்கு?" என்று அவர்கள் பக்கத்திலே நின்றவர்களை வினவினார்கள்; அவர்கள், "இது மதுரையிற் பிட்டு விற்கும் செம்மனச் செல்வியாருடைய பங்கு; இதை அடைக்கும்படி அவ்வம்மையார் கூலியாளரை விட்டிருக்கிறார். அவர் அந்தக் கொன்றை மரநீழலிலே படுத்து நித்திரை செய்கிறார்" என்றார்கள்.

ஏவலாளர் இதை அதிகாரிக்கு அறிவித்தார்கள். அதிகாரி அதிக கோபங் கொண்டு "அவனை என்முன் கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டான். ஏவலாளர் உடனே அவரை எழுப்பிக் கையிலே பிடித்து இழுத்துக் கொண்டு போய் அதிகாரிக்கு முன் விட்டார்கள். அதிகாரி தன் பக்கத்திலே நின்ற தண்டஞ்

செய்வோரில் ஒருவனைப் பார்த்து, "இங்கே நிற்கும் கூலியாளுக்கு இரத்தம் வடியும்படி அடி" என்று கட்டளையிட்டான். சேவகன் கோபமான வார்த்தைகளுடன் கையிற் பிரம்பை எடுத்துச் சிவபெருமானாகிய கூலியாளருடைய திருமேனியில் அடித்தான். உடனே அவர் மறைந்தருளினார். அந்த அடி பாண்டியராசன்மேற் பட்டது. மந்திரிமார்மேற் பட்டது; அடித்த சேவகன்மேற் பட்டது; மரங்கள் மேலும் மிருகங்கள் மேலும் பட்டது; எல்லா உலகங்களிலுமுள்ள எல்லா உயிர்கள்மேலும் பட்டது; எல்லாரும் அதிசயித்தார்கள்.

---

## ௫. சிவபெருமான் விறகு விற்றமை

முன்னொரு காலத்திலே மதுரையில் வரகுணபாண்டியன் என்னும் ஓர் அரசன் இருந்தான். ஒருநாள் அவனுடைய மாளிகைக்கு ஒரு சங்கீத வித்துவான் வந்தான். அவனுடைய பெயர் ஏமநாதன். அவன் அநேக பாட்டுக்களை வீணை முதலிய வாத்தியங்களோடு அரசனுக்கு முன்பாகப் பாடினான். அரசன் அவைகளை அதிகமாக மெச்சி அவனுக்கு அநேக உபகாரங்களைக் கொடுத்தான்.



அவ்வூரிலே பத்திரன் என்னும் ஒரு சங்கீத வித்துவான் அரசனிடம் இருந்தான். அரசன் பத்திரனுடைய சாமர்த்தியத்தை அறிய விரும்பி அவனைத் தன்னிடத்திற்கு அழைத்து, "என்னுடைய அரமனையில் ஏமநாதன் என்னும் ஒரு வித்துவான் வந்திருக்கிறான்; அவனை நீ உன் சங்கீத வல்லமையால் வெல்லுவாயா?" என்று கேட்டான். அதற்குப் பத்திரன், "அவனை வெல்லுகிறதற்கு என்னால் இயன்ற வரையில் முயற்சி செய்வேன்" என்றான். அரசன் இந்த இரு வித்துவான்களும் தங்கள் சங்கீதத் திறமையைக் காட்டுதற்கு ஒரு நாளைக் குறித்து ஊரெங்கும் அறிவித்தான்.

பத்திரன் ஏமநாதனுடைய இசைத் திறமையை அறிந்திருந்தமையினாலே, அவன் பாடுவதில் தன்னை வென்றுவிடுவான் என்று நிச்சயித்துக் கொண்டான். ஆயினும், அவன் சிவபெருமானுடைய தொண்டனா யிருந்ததினாலே புறச்சமயத்தவனாகிய ஏமநாதன் தன்னை வெல்லுவது அவனுக்கு மனவருத்தமாயிருந்தது. சிவபெருமான் தம்மிலே அன்புள்ளவர்களை ஒருகாலமுங் கைவிடமாட்டார் என்பதை நம்பி, பத்திரன் அரசனுடைய கேள்விக்குச் சம்மதித்தான்.

பத்திரனுடைய சிவபத்தியை அறியாதவர்கள் அவன் தோற்றேபோவான் என்று நினைத்தார்கள்; சிவபெருமானுடைய அடியவர்களுக்குக் கிடையாதது எதுவும் உண்டா? பத்திரன் சுந்தரேசுவரர் கோயிலிற் போய் ஒவ்வொரு நாளும் யாழ் வாசித்துப் பாட்டுக்கள் பாடுபவன்; சிவபெருமானுடைய திருத்தொண்டிலேயே தன்னுடைய காலம் முழுவதையும் போக்குபவன்; அவன் தனக்கு நேரவிருக்கும் அவமானத்தைக் காத்துக் கொள்ளும்படி சுவாமியை வேண்டுதல் செய்தான். சுவாமி அவன்மேல் இரங்கி அவனுக்கு உதவி செய்யத் திருவுளங் கொண்டார்.

அவர் ஒரு கிழவனைப்போல் உருவமெடுத்துத் தலையில் விறகுகட்டும் கையில் யாழையுங்கொண்டு தெருக்களிலே திரிந்தார். யாராவது விறகின் விலையைக் கேட்டால், ஒருவரும் வாங்கமுடியாத பெருவிலையைச் சொல்லுவார்; ஆதலால் விறகு விலைப்படவில்லை. பொழுது படும்போது, சுவாமி ஏமநாதன் இருக்கிற விடுதி வீட்டுக்குச் சென்றார். அங்கே புறத்திண்ணையில் விறகு கட்டை வைத்துவிட்டு யாழ் வாசித்துப் பாடிக்கொண்டிருந்தார்.



அந்த யாழோசையைக் கேட்டு வியப்புற்று ஏமநாதன் வெளியே வந்து கிழவனைப் பார்த்து, "நீ யார்? இந்தச் சங்கீதமெல்லாம் எங்கே கற்றுக்கொண்டாய்?" என்று கேட்டான். சுவாமி "நான் பத்திரனென்னும் சங்கீத வித்துவானுடைய வேலைக்காரன்; அவன் பாடப் பாட நான் ஒவ்வொரு நாளுங் கேட்டுக்கொண்டிருப்பேன்; எனக்கும் பாடத் தெரியும்" என்றார்; அப்போது ஏமநாதன், "இன்னும் ஒருமுறை பாடுவாயா?" என்றான்; சுவாமி அதற்குச் சம்மதித்துப் பராக்குப் பார்த்துக் கொண்டு அவதானமின்றிப் பாடுபவர் போற் பாடினார். ஆயினும் அந்தச் சங்கீதமோ தேனினும் இனியதாய் இருந்தது. அயலவர்கள் தங்கள் வேலைகளை விட்டு அவருடைய பாட்டைக் கேட்க வந்தார்கள்.

ஏமநாதன் நடுநடுங்கி, "நான் இவைபோலும் இனிமையான பாடல்களை முன்னொருபோதுங் கேட்டதில்லை; இவை தெய்வத்தன்மை யுடையனவாய் இருக்கின்றன. பத்திரனது வேலைக்காரனுடைய பாட்டு இப்படியானால், அப்பத்திரனுடைய பாட்டு எவ்வளவு சிறந்ததா யிருக்கும்!" என்று எண்ணி அன்றிரவு ஒருவரும் அறியாமல் அவ்வூரை விட்டுப் புறப்பட்டான்.

அடுத்த நாள் ஏமநாதன் இராசசபைக்குப் போகாதபடியால், அரசன் அவனை எங்கும் தேடுவித்தான்; அவனைக் காணவில்லை; அவன் பத்திரனுக்குப் பயந்து ஒளித்து ஓடிவிட்டான் என்று அரசன் நினைத்து, பத்திரனை அழைப்பித்து அவனுக்கு அநேக உபகாரங்களைக் கொடுத்து யானைமேல் ஏற்றி ஊர்வலஞ் செய்வித்தான்.

---

## ரு. சிவபெருமான் பொதிசோறு கொடுத்தமை

திருநாவுக்கரசு நாயனார் சிவபெருமானிடத்தில் நிறைந்த அன்புடையவர். அவர் எப்போதும் கோயில்களுக்குப் போய்ச் சிவபெருமானை வணங்கிக் கோயிலிலே திருத்தொண்டுகள் செய்துகொண்டு வந்தார். அவர் பல கோயில்களையுந் தரிசித்துக்கொண்டு வந்து ஒருநாள் திருப்பைஞ்ஞீலி என்னுங் கோயிலுக்குப் போகப் புறப்பட்டார்.

போகும் வழியில் அவருக்குப் பசியுந் தாகமும் இளைப்பும் உண்டாயின; ஆயினும், சிவனடியார்கள் தங்களுடைய சரீரத்துக்கு வருகின்ற துன்பங்களைப் பொருட்படுத்



தார்களாதலால், திருநாவுக்கரசு சுவாமிகள் இளைப்பை நினையாமல் நடந்து போனார். அப்போது சிவபெருமான் அவருடைய வருத்தத்தை நீக்க நினைந்தார். சிவபெருமான் வழியிலே ஓர் இடத்தில் ஒரு குளத்தையும் நிழல் மரங்களையும் உண்டாக்கினார். ஒரு பிராமண வடிவங் கொண்டு, அங்கே பொதிசோறு வைத்துக் கொண்டு இருந்தார்.

திருநாவுக்கரசு சுவாமி சிவபெருமானாகிய பிராமணர் இருந்த இடத்துக்குச் சென்றார். அப்போது பிராமணர் அவரைப் பார்த்து, "நீர் வழிநடந்து மிகவும் இளைத்துப் போனீர்; என்னிடத்திலே பொதிசோறு இருக்கிறது; இதை உண்டு இந்தக் குளததிலே தண்ணீர் குடித்து இங்கே ஆறியிருந்து போகலாம்" என்று சொல்லியருளினார். திருநாவுக்கரசு சுவாமிகள் அவையெல்லாம் சிவபெருமானுடைய அருளே என்று நினைத்தார்; பிராமணர் பொதிசோற்றைக் கொடுக்க அதை வாங்கி உண்டு தண்ணீர் குடித்துவிட்டு அங்கேயுள்ள மர நிழலிலே இருந்தார்.

அப்போது பிராமணர் அவரைப் பார்த்து, 'நீர் இனி எங்கே போவீர்?' என்றார். திருநாவுக்கரசுசுவாமி தாம் போகு

மிடம் திருப்பைஞ்ஞீலி என்னும் ஊர் என்று சொன்னார். சிவபெருமானாகிய பிராமணர், "நானும் அங்கேதான் போகிறேன்; நாங்கள் கூடிக்கொண்டு போவோம்" என்று சொல்லிக் கூடிக்கொண்டு போனார். திருப்பைஞ்ஞீலிக்குச் சமீபமாகப் போனதும் சிவபெருமான் மறைந்தருளினார். திருநாவுக்கரசு சுவாமி அதைக்கண்டு தமக்காக இவ்வளவெல்லாம் செய்தவர் சிவபெருமானே என்பதை உணர்ந்து மிக மகிழ்ந்து மனங்கசிந்தார். பின்பு, திருப்பைஞ்ஞீலிக்குப் போய், சுவாமிதரிசனஞ் செய்து கோயிலிலே திருத்தொண்டுகள் செய்துகொண்டிருந்தார்.

---

## ௭. மார்க்கண்டேயர் சரித்திரம்

காசிக்கு அயலிலே கடகம் என்றொரு பட்டணம் உண்டு. அங்கே மிருகண்டு என்னும் ஒரு பிராமணர் இருந்தார். அவருக்கு நெடுநாளாகப் பிள்ளையில்லையாக, அவர் காசிக்குப் போய் மணிகர்ணிகை யென்னுங் கோயிலையடைந்து சிவபெருமானை இடையறாமல் வழிபட்டுக்கொண்டு வந்தார்; ஒரு நாள் சுவாமி அவருக்குத் தோன்றி, "உனக்கொரு ஆண்பிள்ளை பிறக்கும்; அது



நோயில்லாததாய், நன்றாய்ப் படிக்கக் கூடியதாய், நல்ல குணமுள்ளதாய், என்னிடத்து மிகுந்த அன்புள்ளதாய், பதினாறு வயதுள்ளதாய் இருக்கும்" என்று அருளிச்செய்தார்.

அந்நாளில் அவருடைய மனைவியார் கருப்பவதியானார்; நல்ல ஒரு ஆண்குழந்தை பிறந்தது; அந்தப் பிள்ளைக்கு மார்க்கண்டேயர் என்று பெயர் இடப்பட்டது; அவர் ஐந்து வயதானதும் பூணூலிட்டுப் படிக்கத் தொடங்கினார்; பொதுவாகப் படிக்க வேண்டிய நூல்களெல்லாவற்றையும் அவர் அற்ப காலத்திலே படித்து முடித்தார். பின்பு சிவபெருமானால் அருளப்பட்ட வேதங்களையும் ஆகமங்களையும் படித்து அவைகளின் உண்மைப் பொருளை உணர்ந்து சிவபெருமானிடத்து மிகுந்த அன்புள்ளவராயினார். அவர் ஒவ்வொரு நாளும் சிவபெருமானையும் சிவனடியாரையுந் தாய் தகப்பனையும் வணங்கித் தம்முடைய கடன்களை ஒழுங்காகச் செய்து வந்தார்.

அவருக்குப் பதினாறும் வயது தொடங்கியபோது, தாயும் தகப்பனும் அவரைக் கண்டபொழுதெல்லாம் துக்கப்பட்டு வருந்தினார்கள். இதை அவர் கண்டு ஒரு நாள்

அவர்களை வணங்கி, "நீங்கள் இப்படி வருந்துதற்குக் காரணமென்ன?" என்று கேட்டார். அதற்கு அவர்கள், "மகனே, நீ இருக்கும் வரையில் எங்களுக்கு என்ன குறை? ஆயினும் உனக்கு வயது பதினாறு தான் உள்ளதென்று சிவபெருமான் சொல்லியருளினார். அந்தப் பதினாறு வயது வந்துவிட்டது; அதனாலே நாங்கள் துன்பப் படுகின்றோம்" என்றார்கள். அவர்களை அவர் பார்த்து, "நீங்கள், ஒன்றுக்கும் பயப்பட வேண்டாம்; நான் சிவபூசை செய்து அந்தச் சிவபூசையின் பலனாக, மரணத்தை வெல்லுவேன்" என்று சொல்லி அவர்களுடைய காலில் விழுந்து கும்பிட்டுக்கொண்டு மணிகர்ணிகை என்னும் கோயிலுக்குப் போனார்.

அங்கே அவர் உள்ளம் உருகக் கண்ணீர் சொரியச் சிவபெருமானை வணங்கிக் கோயிலைப் பலமுறையுஞ் சுற்றிக் கும்பிட்டார். பின்பு கோயிலுக்குத் தெற்குப் பக்கத்திலே ஒரு சிவலிங்கத்தை வைத்து மிகுந்த அன்போடு பூசை செய்து பல நாளாக வணங்கிக்கொண்டு வந்தார். ஒரு நாள் சுவாமி அவருக்குத் தோன்றி, "நீ மிகுந்த அன்போடு பூசை செய்கின்றாய்;



ஆதலால், உனக்கு எது விருப்பமோ அதைக் கேள்; நாம் தருவோம்" என்று சொல்லியருளினார். அதற்கு மார்க்கண்டேயர், "மரணத்துக்கு அகப்படாமல் என்னைக் காத்தருளல் வேண்டும்" என்று கேட்டார். சிவபெருமான், "நீ பயப்படாதே; நீ செய்த பூசையின் பலனால் உன்னுடைய சரீரம் அழியாத் தன்மையை யடைந்திருக்கிறது" என்று சொல்லியருளினார்.

மார்க்கண்டேயர் சிவபெருமானைத் தியானித்துக்கொண்டு மணிகர்ணிகைக்குப் போனார்; அங்கே கோயிலைச் சுற்றிக் கும்பிட்டார்; பின்பு தம்முடைய ஊருக்குப் போனார். அவருடைய தாயும் தகப்பனும் அவர் இறந்துபோவாரென்று மனங்கலங்கி அழுது புலம்பிக்கொண்டு இருந்தார்கள். அப்போது அவர் நடந்த செய்திகள் யாவற்றையும் அவர்களுக்குச் சொல்லி அவர்களுடைய துக்கத்தை நீக்கினார்.

அவர் அங்கே சிலநாள் இருந்து அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் பல ஊர்களுக்குப் போய்ச் சிவாலயங்களைத் தரிசித்துப் பரிசுத்தராகி முத்தியடைந்தார்.

---

## அ. திருநாவுக்கரசுநாயனார் திருக்கைலாசத்துக்குப் போதல்

திருநாவுக்கரசுநாயனார் தென்னிந்தியாவிலுள்ள கோயில்களெல்லாவற்றையுந் தரிசித்து முடித்த பின்பு, திருக்கைலாசத்திற்குப் போக விரும்பினார். சிவனடியார்கள் கோயிலுக்குப் போகும்போது வண்டி முதலியவைகளில் ஏறமாட்டார்கள். ஆதலால் திருநாவுக்கரசு நாயனார் நடந்து போகவேண்டி யிருந்தது. தொடக்கத்திற் பகலிலே மாத்திரம் நடந்தார். பின்பு நெடுந்தூரம் போகவேண்டி யிருப்பதைக் கண்டு பகலிலும் இரவிலும் நடந்தார்.

அநேக நாட் சென்றபின்பு காசியை யடைந்தார். அங்கே சுவாமி தரிசனஞ் செய்து கங்காநதியைக் கடந்து அப்பாலே போனார். அங்கே பாதைகளில்லை. எல்லா இடமும் கூரிய கற்கள் உள்ள காடா யிருந்தது. கற்களுக்கு மேலே நடக்க அவருடைய கால்கள் அரைந்து தோல் எடுபட்டு, இரத்தஞ் சிந்திக்கொண்டிருந்தன. அவர் கால்வருத்தத்தைப் பாராமல் சிவபெருமானையே நினைத்துக்கொண்டுபோனார்.

கடைசியாகக் கால் நிலத்திலே வைக்க முடியாமற் போனது; பின்பு தவழ்ந்து



கொண்டு போனார்; முழங்காலும் கையும் தேய்ந்து சிதைந்தன; பின்பு உருண்டு கொண்டு போனார்; வெயிற் சுட்டினாலும் கற்கள் கீறினதினாலும் உடலிலுள்ள தசை தேய்ந்துகொண்டு வந்தது. சிவபெருமானிலே பதிந்த அன்பினாலே அவருக்குச் சரீர வருத்தம் தோன்றவில்லை. கடைசியாய் அவருக்கு உடம்பிலே சிறிதேனும் பெலமில்லாமற் போனது; ஒருவிதமாயும் அசைந்துகொள்ள முடியவில்லை; ஆதலால், அவர் வழியிலே கிடந்தார்.

சிவபெருமான் இவரைத் தென்னிந்தியாவுக்குத் திரும்பப் பண்ணுதற்குத் திருவுளங் கொண்டார். திருநாவுக்கரசுநாயனார் கிடந்த இடத்திற்கயலே சிவபெருமான் ஒரு குளத்தை உண்டாக்கி, ஒரு முனிவரைப்போல் அவருக்கு முன்புபோய், அவரை மிகுந்த இரக்கத்தோடு பார்த்து, “நீர் உடம்பெல்லாம் தேய்ந்துபோக இவ்வருத்தத்தோடு இந்தப் பொல்லாத காட்டில் ஏன் கிடக்கின்றீர்?” என்று கேட்டார்.

திருநாவுக்கரசு சுவாமி அந்தச் சிவனடியாரைக் கண்டதும் சந்தோஷப்பட்டு அவரைப் பார்த்து, “நான் கைலாசத்திலே சிவபெருமானைக் கண்டு கும்பிட மிகவும்

ஆசைப்பட்டு இப்படி வந்தேன்" என்றார். அதற்கு, "தேவர்களும் முனிவர்களும் கைலாசத்திற்குப் போவது அரிது! மனிதனாகிய நீர் போகத் துணிவதென்ன? இந்தக் கொடிய காட்டுக்கு ஏன் வந்தீர்? நீர் திரும்புவதுதான் புத்தி" என்றார். திருநாவுக்கரசு சுவாமி, "திருக்கைலாசத்திலிருக்கிற சிவபெருமானுடைய திருக்கோலத்தைக் கண்டலல்லாமல், இந்த அழிந்துபோகிற உடம்பைக்கொண்டு நான் திரும்பமாட்டேன்" என்று மறுத்தார்.

அப்போது சிவபெருமான் ஆகாயத்தில் மறைந்து, அசரீரியாக, "நாவுக்கரசனே, எழுந்திரு" என்றார்; உடனே "அப்பர் சுவாமியுடைய உடம்பு, தேய்வுகள் எல்லாம் நிறைந்து, ஊறொன்றுமில்லாமல் முன்போலானது.

அவர் எழுந்து சிவபெருமானை நோக்கி, "சுவாமி, தேவரீர் திருக்கைலாசத்தில் எழுந்தருளி யிருக்கின்ற திருக்கோலத்தை எனக்குக் காட்டியருளல் வேண்டும்" என்று கேட்டார். அப்போது சிவபெருமான், "நீ இந்தக் குளத்திலே முழுகிவிட்டு, திருவையாற்றுக்கு வா; நான் கைலாசத்திலே இருக்கிற கோலத்தைக் காட்டுவேன்"



என்று கட்டளையிட்டருளினார். அப்பர் சுவாமி அந்தக் குளத்திலே முழுகினார். சிவபெருமானுடைய திருவருளினாலே அந்த நிமிஷமே அவர் திருவையாற்றையடைந்தார்; அங்கே சிவபெருமான் திருக்கைலாசத்தில் இருக்குந் திருக்கோலத்தை அவருக்குக் காட்டியருளினார். அப்பர் சுவாமி அத் திருக்கோலத்தைக் கண்டு, விழுந்து கும்பிட்டுக் கண்களிலிருந்து ஆனந்த அருவி சொரிய அநேக தேவாரங்களைப் பாடினார்.

---

## ௯. அரிவாட்டாய நாயனார்

சோழ மண்டலத்திலே மணமங்கலம் என்கின்ற ஓர் ஊர் உண்டு. அங்கே தாயனார் என்னும் ஒரு வேளாளர் இருந்தார். அவர் மிகுந்த செல்வர்; சிவபெருமானிலே அன்பு நிறைந்தவர். அவர் ஒவ்வொரு நாளும் செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாவடுவும் சுவாமிக்குப் படைக்கும் பொருட்டுக் கோயிலுக்குக் கொண்டுபோய்க் கொடுத்து வந்தார்.

இப்படி நடக்குங் காலத்திலே, சிவபெருமான் அவருக்கு வறுமை வரச்

செய்தார். வறுமை வந்தபோது, நாயனார் கூலிக்கு நெல்லு அரியுந் தொழிலைத் தொடங்கினார். அவர் தமக்குக் கூலியாக வருகிற நெல்லிற் செந்நெல்லாய்க் கிடைப்பதைக் கோயிலுக்குக் கொடுத்துவிட்டுக் கார்நெல்லாய் வருவதைத் தம்முடைய உணவுக்கு எடுத்துக்கொள்வார்.

சிலநாட் செல்ல, சிவபெருமான் அந்த ஊரில் இருக்கிற வயல்களிலுள்ள நெல்லெல்லாம் செந்நெல்லாகும்படி அருள் செய்தார்; அதனாலே நாயனாருக்குக் கூலியாகக் கிடைக்கும் நெல்லெல்லாம் செந்நெல்லாயிருந்தது; நாயனார் இதுவும் கடவுளுடைய திருவருளே என்று சந்தோஷப்பட்டு ஒவ்வொரு நாளும் வயலுக்குப் போய் நெல்லரிந்து, கூலி நெல்லெல்லாம் செந்நெல்லா யிருந்தபடியால், முழுவதையுங் கோயிலுக்குக் கொடுத்து வந்தார். அதனாலே அவருக்கு உணவுக்கு நெல் இல்லாமற் போய்விட்டது.

இதைக் கண்ட அவருடைய மனைவியார் வீட்டுக் கொல்லையிலுள்ள இலைகளைக் கொய்து சமைத்துவைக்க, நாயனார் அதை உண்டு வந்தார். சிலநாட் சென்றபின் கொல்லையிலுள்ள இலைகளும் ஒழிந்து



போயின; உண்ணுதற்கு வேறொன்றுமில்லாமையால், அவர் தண்ணீரை மாத்திரம் குடித்துவந்தார். ஆயினும் நெல்லு அரிந்து கூலிவாங்கி அதைக் கோயிலுக்குக் கொண்டுபோய்க் கொடுப்பதில் அவர் ஒரு காலமுந் தவறினாரல்லர்.

ஒரு நாள் அவர் செந்நெல்லரிசியும் செங்கீரையும் மாங்காயும் கூடையில் வைத்துச் சுமந்துகொண்டு கோயிலுக்குப் போனார். போகும்போது அவர் பசியினாலும், உடம்பு மெலிவினாலும் வழியிலே கால் தளர்ந்து தள்ளாடி விழுந்தார். கூடையிலிருந்த அரிசி முதலியன சிதறிப்போயின. அவர் மிகவும் துக்கப்பட்டு, "இனி நாம் கோயிலுக்குப் போவதினால் என்ன பயன்? இந்தப் பொருளெல்லாம் சுவாமிக்குப் படைக்கக் கிடையாமற் போய்விட்டதே; சிவத் திரவியங்களைச் சிந்திவிட்டேனே! நான் பெருங் கொடும்பாவி! இந்த உயிரை நான் இனி வைத்துக் கொண்டிரேன்" என்று கையிலிருந்த அரிவாளினாலே கழுத்தை வெட்டத் தொடங்கினார்.

அப்போது சிவபெருமான் அவரிலே கருணைகூர்ந்து, அரிவாள் பிடித்த கையைத் தமது திருக்கையினாற் பிடித்தார். நாயனார்

சிவபெருமானைக் கண்டு பெருமகிழ்ச்சி யடைந்து வணங்கி நின்றார். அப்போது சிவபெருமான், "நீ என்மேல் வைத்த அன்பினாலே செய்த செய்கை நன்றாயிருக்கின்றது! நீ உன் மனைவியோடு வந்து எம்முடைய பாதத்தை அடைந்திரு" என்று சொல்லி மறைந்தருளினார்.

அரிவாளினாலே நாயனார் தம் கழுத்தை வெட்டப் போனபடியால், இவருக்கு அரிவாட்டாய நாயனார் (அரிவாள்+தாயனார்) என்று பெயராயது.

---

## கo. அரசன் வண்ணானைக் கும்பிட்டமை

மலையாள தேசத்திலே சேர நாடு என்று ஒரு நாடு உண்டு. அந்நாட்டை ஆண்டு வந்த இராசாக்களுடைய குடும்பத்திலே பெருமாக்கோதையார் என்னும் ஒரு சற்புத்திரர் சைவசமயத்தை வளர்ப்பதற்காகப் பிறந்தார். அவர் முற்பிறவியிலே சிவபுண்ணியங்கள் அதிகமாகச் செய்து கடவுளிலே மிகுந்த அன்புடையவராய் இருந்தவர். ஆதலால் அவர் சிறு வயசிற்றானே உலகத்திலே யுள்ள இன்பங்களெல்லாம் துன்பங்களென்று வெறுத்துத்



தள்ளினார். இராசபுத்திரர்க்குரிய போர்த்தொழில் முதலிய ஒன்றையும் பழகவில்லை.

ஒருநாள் யாதாயினும் ஒரு சிவன் கோயிலிலே தாம் போயிருக்க வேண்டும் என்று எண்ணி, தமது மாளிகையை விட்டு நீங்கி, ஒரு சிறந்த சிவாலயத்திற்குப் போய் அங்கே யிருந்தார். அங்கே அவர் கோயிலைக் கூட்டுவதும், மெழுகுவதும், சுவாமிக்குச் சாத்தப் பூ எடுப்பதும், மாலை கட்டுவதும் முதலிய பெரிய தொண்டுகளைச் செய்து இடைவிடாமற் கடவுளைத் தியானித்துக் கொண்டிருந்தார். இப்படி யிருக்கும் நாளிலே அந்நாட்டுக்கு இராசாவாயிருந்தவர் சந்நியாசியாகித் தவஞ் செய்தற்காகக் காட்டுக்குப் போனார். அந்த இராசாவுக்குப் பிள்ளையில்லை; அதனால் அந்த ஊருக்கு ஓர் இராசாவைத் தெரிந்தெடுக்க வேண்டியிருந்தது.

மந்திரிமார் எல்லாரும் பெருமாக்கோதையாராகிய சிவனடியாரிடம் போய்த் தம்முடைய நாட்டை ஆண்டு தங்கள் எல்லாரையுங் காக்கவேண்டுமென்று அவரை இரந்து கேட்டார்கள். பெருமாக்கோதையார் தமது திருத்தொண்டுக்கு இடையூறு வந்துவிட்டதே யென்று பயப்

பட்டுச் சிவபெருமானுக்கு முறையிட்டார். சிவபெருமான் அவருக்கு அருள்புரிந்து சிவபத்தி சற்றேனும் குறைவில்லாமல் இராச்சியஞ் செய்யும் வல்லமையைக் கொடுத்தார். அவர் மந்திரிமாரிடம் போய் அவர்கள் கேட்டுக்கொண்டபடி இராசா வாகிறதற்குச் சம்மதித்தார்.

அவர்கள் மிகவுஞ் சந்தோஷப்பட்டுச் சகல இராச வரிசைகளோடும் அவரை அழைத்துக்கொண்டு போனார்கள். போகும் வழியிலே ஒரு வண்ணான் தோளிலே உவர் மண்பொதி சுமந்துகொண்டு எதிரில் வந்தான். அதற்குச் சற்று நேரத்துக்கு முன், மழை பெய்தமையினால், அவனுடைய தோளிலேயிருந்த உவர்மண் கரைந்து அவனுடைய சரீரத்திலே ஊறியிருந்தது. அது உலர்ந்தபோது, சரீரம் முழுவதும் திருநீறு பூசியது போலத் தோன்றினது. ஆதலால், அவ்வண்ணானைச் சிவனடியாரென நினைத்துப் பெருமாக்கோதையார் உடனே யானையினின்றும் இறங்கிக் கும்பிட்டார். அது கண்ட வண்ணான் பயந்து நடுங்கி அவரை வணங்கி, "அடியேன் அடி வண்ணான்" என்றான். பெருமாக்கோதையார் பின்னரும்



அவனைப் பணிந்து, "அடியேன் அடிச் சேரன், தேவரீர் திருநீற்றை நினைப்பித்தீர்; மனம் வருந்தாமற் போகுதிர்" என்று சொன்னார். மந்திரிமார் எல்லாரும் அதிசயித்தார்கள்.

திருநீற்றை நினைப்பித்த வண்ணானை அவர் தம்மினும் மேலாக மதித்து வணங்கினாரானால், திருநீற்றினுடைய மேன்மை எவ்வளவாக இருத்தல் வேண்டுமென்று மந்திரிமார் நினைத்தார்கள். திருநீற்றை இவ்வளவு மேலாக மதித்த பெருமாக்கோதையாருடைய சிவபத்தி எவ்வளவு சிறந்தது என்று அவரை வியந்தார்கள்.

---

## கக. ஏனாதிநாதர்

சோழ நாட்டிலே எயினனூர் என்றொரு ஊர் உண்டு; அங்கே ஒரு காலத்திலே ஏனாதிநாதர் என்னும் ஒருவர் வாழ்ந்தார். அவர் கடவுளிலே அதிக அன்புள்ளவர்; இராசகுமாரர்களுக்கு வாள் வித்தை பழக்குதல் அவருடைய தொழில்.

அவருக்கு அதிசூரன் என்று இனத்தவன் ஒருவன் இருந்தான்; அவனும் வாள் வித்தை பழக்குகிறவன்; ஆயினும்

அவன் இவரளவு திறமை யில்லாதவன். ஆனமையால், அதிகமானவர்கள் அவனிடத்திலே வாள்வித்தை பழகப் போகவில்லை. அதனால், அவன் ஏனாதிநாதரிலே பொறாமை கொண்டு அவரைக் கொல்ல வேண்டுமென்று நினைத்தான்.

ஒருநாள் அவன் தனக்குத் துணையானவர்களைச் சேர்த்துக்கொண்டு அவருடைய வீட்டுக்குப் போய் அவரைப் போருக்கு வரும்படி கேட்டான். போருக்கு வரச்சொல்லி யாராவது கேட்டால், அதற்கு மறுப்பது அவர்களுடைய சாதிக்குரிய கொள்கைக்குப் பொருந்தாது. ஆதலாற் போரிலே வெறுப்புள்ளவரா யிருந்தும் தம்முடைய சாதிமுறை தவறக்கூடாது என்றெண்ணி ஏனாதிநாதர் அதற்குச் சம்மதித்துப் போனார். அதிசூரன் போரிலே தோற்றுப் பின்காட்டி யோடினான்.

அன்றிரவு முழுவதும் அதிசூரனுக்கு நித்திரை யில்லை. ஏனாதிநாதரை வெல்லுதற்கு வழியென்ன என்று இரா முழுவதும் அவன் யோசித்துக்கொண்டு கிடந்தான். கடைசியில் ஒரு வஞ்சகப் புத்தி அவனுடைய மனத்திலே தோன்றினது. அதுதான் சரியான வழியென்று நினைத்



துக்கொண்டு, அவன் அடுத்த நாட் காலையில் தனிப் போர் செய்வதற்கு வரும்படி ஏனாதிநாதரை அழைத்தான். ஏனாதிநாதர் இதைப்பற்றி வேறொருவருக்கும் சொல்லாமல், வாளையும் பரிசையையும் எடுத்துக்கொண்டு, போர் செய்கிற இடத்துக்குப் போனார்.

முன்னொரு காலமும் திருநீறு பூசாத அதிசூரன் அன்றைக்குத் திருநீறு பூசிக்கொண்டு போனான்; ஏனாதிநாதருக்குச் சமீபத்திற் போனபோது தன் நெற்றியைப் பரிசையால் மறைத்துக்கொண்டான். போர் தொடங்கியது. ஏனாதிநாதர் அவனைத் தாக்க ஆயத்தஞ் செய்யும்போது, அவன் தன்னுடைய நெற்றியை மறைத்த பரிசையைக் கீழே பிடித்தான். ஏனாதிநாதர் அவனுடைய நெற்றியிலே பூசியிருந்த திருநீற்றைக் கண்டார். கண்டபொழுது "ஆ! பிழை செய்துவிட்டேனே; திருநீறு சிவபெருமானைக் குறிப்பதல்லவா? திருநீற்றை எங்கே கண்டாலும் அதை வணங்கல் வேண்டும்; ஒருவருடைய நெற்றியிலே திருநீறு இருக்கக் கண்டால் அந்தத் திருநீற்றுக்காக நாம் அவரை நேசித்தல் வேண்டும். பாவமல்லாத வழியாக அவருக்கு உதவி செய்யக்கூடு

மானால், நாம் அப்படிச் செய்தல் வேண்டும். எம்மைக் கொல்லுவதுதானே இவருக்குத் தேவை; நாம் இவருக்குத் துணை செய்வோம்" என்று நினைத்து ஏனாதிநாதர் வாளையும் பரிசையையும் கீழே போடக் கருதினார்.

உடனே அவருக்கு வேறொரு யோசனை வந்தது. "ஆயுத மில்லாமல் நிற்பவனை ஆயுதத்தினாலே கொல்லுகிறவனுக்கு நரக தண்டனை கிடைக்கும்; நான் ஆயுதங்களைக் கீழே போட்டுவிட்டு நிற்கும்போது இவர் என்னைக் கொன்றால் இவருக்கு நரக வேதனை கிடைக்கப்போகிறதே! இவருக்கு நரக தண்டனை வராமல் நான் இவரைக் காத்தல் வேண்டும்" என்று எண்ணி ஏனாதிநாதர் வாளையும் பரிசையையும் கைவிடாமல் எதிர்ப்பவர்போல நின்றார். பாதகனாகிய அதிசூரன் அவரை வாளால் வெட்டிக் கொன்றான். அப்பொழுது சிவபெருமான் அவருக்குத் தோன்றி அவரைத் தம்மோடு சேர்த்தருளினார்.

---

## ௧௨. ஓர் இராசா

மலையாள தேசத்திலே ஓர் இராசா இருந்தார். அவர் கடவுட் பத்தியிற் சிறந்



தவர்; சைவசமய ஒழுக்கங்களிலே ஒரு காலமுந் தவறாதவர். அவர் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலுந் தவறாமற் கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்கிறவர். அன்றியுஞ் சிவதொண்டுகள் செய்வதில் மிகுந்த ஆசை யுடையவர். அதற்காகத் தம்முடைய இராச்சியத்திலே கிராமப் பக்கங்களிலுள்ள கோயில்களுக்கு அடிக்கடி போய், அந்த இடங்களிலே தம்மை மற்றையவர்கள் அறியாமலிருப்பதற்காக ஊர் மனுஷர்போல வேடமிட்டுக் கொண்டு, ஒவ்வோரிடத்திலும் ஒவ்வொரு நாள் மாத்திரம் நிற்பார். அங்கே நின்று கோயில் கூட்டுவதும், மெழுகுவதும், பூமரங்களுக்குத் தண்ணீர் வார்ப்பதும், சுவாமி வீதி வரும்போது சுவாமி காவுதலும், விளக்குப் பிடித்தலும் ஆகிய திருத்தொண்டுகளை மிகுந்த ஆசையோடு செய்வார். அவர் மிகச் சிறந்த சிவபத்தர்.

அவர் இராசாவாக வந்து நெடுங் காலமாய் விட்டது. அவருக்குப் பின் இராசாவாக வரவேண்டியவன் அவருடைய மருமகன்; அவன் பெரிய துட்டன்; தான் விரைவிலே இராசாவாக வேண்டுமென்று அவன் நோக்கங் கொண்டான். இந்த இராசாவைக் கொல்லுகிறதற்கு

உபாயங்கள் தேடினன். ஒருநாள் ஒரு யோசனைபண்ணி அவரைக் கொல்லுதற்கு ஒழுங்குகள் செய்தான்.

தம்முடைய மாளிகையில் இருக்கும் நாட்களிலே, கோயிலுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, சுவாமியுடைய தீர்த்தம் வாங்கிப் பருகியல்லது போசனஞ் செய்வதில்லை என்பது அந்த இராசாவின் நியதியாகும். ஒருநாள் அவர் சுவாமி தரிசனஞ் செய்துவிட்டுக் குருக்களிடத்தில் தீர்த்தம் வாங்குதற்காக நின்ருர். குருக்கள் தீர்த்தம் கொண்டு வந்தார். அக்குருக்கள் தம்மை ஒரு புண்ணியவான் போலக் காட்டிக் கொள்பவர்; உள்ளபடி கொடிய துட்டர்; ஆயினும் சிவபூசை செய்துகொண்டு வந்ததினலே அவருடைய துட்டக் குணம் பெலனற்றுப் போனது அவர் இராசாவுக்கு முன்னே போயும் தீர்த்தத்தைக் கொடுக்காமல் நின்ருர். இராசா தீர்த்தத்தை வாங்குதற்குக் கையை நீட்டினர். குருக்களுடைய சரீரம் முழுவதும் நடுங்கினது; கண்ணீர் தாரையாய் வடிந்தது.

இராசா குருக்களைப் பார்த்து, "சுவாமீ, ஏன் வருந்துகிறீர்கள்? ஒன்றுக்கும் பயப்படாமல் உங்களுடைய குறையை எனக்குச் சொல்லுங்கள்; என்னுற் கூடுமானல் உங்களுக்கு ஒரு பொல்லாங்கும் வராமல் நான் உங்களைக் காப்பேன்" என்ருர். குருக்கள் மிகவும் வருந்தி, "மகாராசாவே, தங்களுடைய மருகனுகிய இளவரசன் பொல்லாதவன்; நான் அவனிலுங் கொடிய பாவி; அவனுடைய கட்டளைப்படி இந்தத் தீர்த்தத்திலே கொடிய நஞ்சைக் கலந்துவிட்டேன். எனக்குச் செய்யவேண்டிய தண்டனையைச் செய்து என்னை நரக தண்டனையிலிருந்து காத்தருள வேண்டும்; நான் உடனே போய்ச் சுத்த தீர்த்தங் கொண்டு வருகிறேன்" என்று அழுதழுது சொன்னர்.

அதைக்கேட்ட இராசா, "ஆசாரியரே, கடவுளுக்குச் சித்தமானல் இந்த நஞ்சு என்னைக் கொல்லும்; ஆயினும் அவருடைய அமிர்தமாகிய தீர்த்தத்தோடு கலந்திருப்பதினலே கொல்லுகிற வலிமை இதற்கு இல்லாமற் போய்விடும்; எப்படியானலும், இந்த நஞ்சு கலந்த தீர்த்தத்தையே நான் இப்போது பருகுவேன். ஒரு தடையுஞ் சொல்லாமல் அதைத் தருக" என்ருர்.

குருக்கள் கை நடுங்க நடுங்க அந்தத் தீர்த்தத்தை இராசாவுக்குக் கொடுத்தார்.

இராசா அதைப் பருகிக்கொண்டு தம்முடைய மாளிகைக்குப் போய் மந்திரியையழைத்து, "என் மருகன் இராசாவாதற்கு மிகவும் விரும்புகிறான்; அவனை இராசாவாக்கிவிடுக; சிவபெருமான் இந்த நாட்டை இரட்சிப்பார்; நான் தவஞ் செய்தற்காகக் காட்டிற்குப் போகிறேன்" என்று சொல்லிக்கொண்டு அந்த நிமிஷமே ஊரைவிட்டுப் புறப்பட்டார்.

———

## ௧௫. சிவைக்கியர்

ஈழ மண்டலத்திலே சிவைக்கியர் என்றொரு வேளாளர் இருந்தார். அவர் பெரிய புண்ணியவான். ஒரு நாள் இரவு அவருடைய வீட்டிலே ஒரு கள்வன் இளநீர் பிடுங்கினான். அது விழுந்த சத்தத்தைக் கேட்டு அவர் அந்த இடத்துக்கு ஓடிப் போனார். கள்வன் தென்னையிலேயே இருந்தான்; அவனை அவர் இறங்கச் செய்து, அன்பாக அழைத்துக்கொண்டு போய்த் தம்முடைய மனைவியாரை எழுப்பி, "இங்கே ஒருவன் பசியால் வருந்துகின்றான்; இவனுக்குச் சோறு கொடு" என்று சொன்னார். அவன் சோறு உண்ட பின்பு, அவர் அந்த இளநீரிலொன்றை வெட்டிக் குடிக்கும்படி



கள்வனிடங் கொடுத்தார். பின்பு அவனுக்கு என்ன குறை இருக்கிறதென்று கேட்டார்; அவன் எல்லாம் திருத்தி என்று சொன்னான். பின்பு அவனைப் போக விட்டார். சிவைக்கியர் அதிகப் பெருந்தன்மையுள்ளவர்.

அவருக்கு ஒரேயொரு புத்திரன் உண்டு. அவன் துட்டப்பிள்ளைகளோடு கூடினதால் தீயபழக்கங்கள் பழகிவிட்டான். அதனால் அவருக்கு மிக்க மனவருத்தம். சிறுவனுக்குப் பத்து வயசு வரையில் ஆய்விட்டது. அவனைத் திருத்துதற்குக் கடவுள் வழிபாடே நல்ல வழியென்று நினைத்து, ஒருநாள் அவர் அவனையழைத்து, "மகனே, சைவப் பிள்ளைகள் ஒவ்வொரு நாளும் கோயிலுக்குப் போதல்வேண்டும்; நீ இன்னமுஞ் சின்னவனல்லை; இனிமேல் நான் கோயிலுக்குப் போகும்போது நீ எப்போதும் என்னுடன் வரவேண்டும்" என்றார்.

சிறுவன் ஒன்றும் பேசாமல் நின்றான். அப்போது சிவைக்கியர், "என்ன மகனே, நாங்கள் மிருகங்களா? மிருகங்கள் உணவு தேடுவதிலும், உண்பதிலும், உலாவித் திரிவதிலும், உறங்குவதிலுங் காலத்தைப்

போக்குவன; நீயும் அவ்வளவோடுதான் காலத்தைப் போக்க எண்ணுகின்றாயோ? இந்த அருமையான மனிதப்பிறவி நமக்குக் கிடைத்தது, நாம் கடவுளை வணங்கி அவரிலே பற்றுவைத்து அவரோடு சேருதற்காக; ஆதலால் நாம் இயன்றளவு கடவுளை வழிபடல்வேண்டும். ஒரு நாளைக்கு அரைமணி நேரமேனும் கடவுள் வழிபாட்டிலே கழித்தலாகாதா? கோயிலுக்குப் போவதுமன்றிக் காலையிலும் மாலையிலும் முகங் கழுவினவுடனே திருநீறுபூசி நாலு தோத்திரஞ் சொல்லிக் கடவுளை வணங்கல் வேண்டும்" என்றார். சிறுவன் ஒருவாறு சம்மதித்தான்.

சிறுவனுடைய பிரியவீனத்தை அவர் கண்டு அவன் கோயிலுக்கு விருப்பத்தோடு போகக்கூடிய முறையில், கோயிற் குருக்களிடத்திலே இரகசியமாக ஓர் ஒழுங்கு செய்துவைத்தார். அன்று பின்னேரம் இருவருங் கோயிலுக்குப் போனார்கள். அவர்கள் கும்பிட்டு முடிந்தபின்பு, குருக்கள் அவர்களுக்குத் திருநீறு கொடுத்துச் சிறுவனிடம் இரண்டு வாழைப்பழமுங் கொடுத்தார். சிறுவன் மிகவுஞ் சந்தோஷப் பட்டுக்கொண்டு வழியிலே வரும்போது, தனக்கு ஒவ்வொருநாளும் குருக்கள்



வாழைப்பழங் கொடுப்பாரா? என்று தகப்பனாரைக் கேட்டான். அதற்கு அவர், "நீ நாளைக்குப் போகிறபொழுது குருக்களைக் கேட்டுப் பார்க்கலாமே" என்றார்; அடுத்த நாள் சிறுவன் கோயிலுக்குப் போய்ச் சுவாமியைக் கும்பிட்டுவிட்டு நின்றான். குருக்கள் இரண்டு வாழைப்பழங் கொடுத்தார். அவன் தனக்கு ஒவ்வொரு நாளும் வாழைப்பழங் கிடைக்குமென்று கண்டு கோயிலுக்கு ஒழுங்காகப் போனான். சிவைக்கியர் மகனை இயன்றவரையும் தம்மோடு வைத்துக்கொண்டு அவனை நல்லபிள்ளையாக்கினார்.

பலநாட் சென்ற பின்பு ஒருநாட் சிறுவன் பள்ளிக்கூடத்திலிருந்து வந்து தகப்பனாரைக் கண்டு "அப்பா, பிறருடைய பொருளை நாம் அனுபவிப்பதுதான் எல்லாச் செய்கைகளிலும் மிக இழிவான செய்கை என்று தருமபுத்திரர் சொல்லியிருக்கிறாராம்; குருக்களிடமிருந்து வாழைப்பழம் வாங்க எனக்குப் பிரியமில்லை" என்று சொன்னான். அதற்குச் சிவைக்கியர், "மகனே, நீ சொல்வது முழுவதுஞ் சரி; ஆனாலும் வாழைப்பழம் இல்லாவிட்டால் நீ கோயிலுக்குப் போகமாட்டாயே" என்றார். அப்போது மகன், "அப்பா, நான் வாழைப்

பழத்துக்காகவா கோயிலுக்குப்போகிறேன்? தொடக்கத்திலே நான் போனது அதற்காகவுந்தான்; இப்போது அதைப்பற்றி நான் சற்றேனும் நினைக்கவில்லை: கடவுள் எங்களெல்லாருக்கும் தாயும் தகப்பனுமாய் இருந்து எங்களிலே மிகுந்த அன்பு வைத்து எங்களைக் காக்கின்றாரல்லவா? நான் உங்களிலே எவ்வளவு பற்றுக இருக்கிறேன்; அப்படித்தானே கடவுளிலும் பற்றுக இருப்பேன். நீங்கள் இல்லாவிட்டாலும் நான் உயிரோடிருக்க இயலும்; கடவுளுடைய அருள் இல்லாவிட்டால் ஒரு நிமிஷமாவது நான் இருக்க இயலுமா? எந்தக் காலத்திலும் எந்தப் பிறவி எடுத்தாலும் அவர்தாமே எம்மைக் காக்கிறவர். இனிமேல் ஒரு நாளைக்காவது நான் கோயிலுக்குப் போகாமல் இருக்க மாட்டேன்" என்றான்.

சிவைக்கியர் இதைக்கேட்டு மிகவுஞ் சந்தோஷப்பட்டு மகனை மார்போடணைத்து முத்தமிட்டு, "உனக்கு இவைகளைச் சொல்லித் தந்தது யார்? நீ சொல்வது முழுவதுஞ் சரி; நீ மிகவும் நல்லபிள்ளையாய் விட்டாய்; இனியுனக்கு ஒருகுறையுமில்லை; நான் உன்னை ஒரு கேள்வி கேட்கப் போகிறேன்; அதற்கு மறுமொழி சொல்லு



பார்ப்போம்; கடவுள் நம்மிலேஅன்புள்ளவர் என்று சொல்லுகின்றாயே; எத்தனை பேர் எத்தனை விதமாக வருந்துகின்றார்கள்; ஒருவன் நித்திரையாய்க் கிடக்கிறபொழுது பாம்பு கடித்து இறக்கிறான்; அப்போதெல்லாம் கடவுள் ஏன் காப்பாற்றவில்லை?" என்றார்.

அதற்குச் சிறுவன், "அப்பா, இதற்கு மறுமொழி எனக்குத் தெரியாது; நான் முன்னே சொல்லியது என்னுடைய உபாத்தியாயர் எனக்குச் சொல்லித்தந்தது; இதை நீங்கள் எனக்கு விளங்கப்படுத்தல் வேண்டும்" என்றான்.

அப்போது, சிவைக்கியர் மகனைப் பார்த்து, "நாம் வருந்துவதெல்லாம் நாம் செய்த குற்றத்திற்காக; நாம் பிழையாக நடந்தால் நமக்கு வருத்தம் வருகிறதல்லவா? வருத்தம் வந்தால் அதை மாற்றுதற்காக வைத்தியர் எவ்வளவு கசப்பான மருந்தும் தருகிறார்; உடம்பிலே ஒரு கொப்புளம் வந்தால், நோக நோக வைத்தியர் கத்தியால் வெட்டுகிறார்; கடவுள் நம்மை வருத்துவது நம்மிலே யுள்ள பொல்லாத குணம் என்று சொல்லப் படுகின்ற வியாதியை மாற்றுதற்காகவே;

இனி, கடவுள் நம்மைக் காப்பாற்றுகிறவர் என்றதின் கருத்து இந்தச் சரீரத்தைக் காப்பாற்றுகிறவர் என்பதன்று; நமக்கு ஒவ்வொரு பிறவியிலும் ஒவ்வொரு சரீரம் கிடைக்கிறது; சரீரம் அழிவதனால் நமக்கு ஒரு பொல்லாங்குமில்லை; இந்தச் சரீரம் போனால் நமக்கு வேறொரு சரீரம் கிடைக்குந்தானே, பாம்பு கடித்துச் சாகிறதென்றால், இந்த உடம்புக்குப் பழுது வருகிறதே யல்லாமல் ஆன்மாவுக்கு ஒரு பழுதுமில்லையே என்று சொன்னார். அவைகளைக் கேட்ட பின்பு சிறுவன் பத்திமானாயும் யோக்கியனாயும் இருந்து தன்னுடைய காலத்தைக் கழித்தான்.

---

## கச. பட்டினத்துப் பிள்ளையார்

தென்னிந்தியாவிலே காவிரிப்பூம் பட்டினம் என்னும் ஒரு பட்டினம் இருக்கின்றது. அங்கே சிவபத்தியிற் சிறந்த சிவநேசகுப்தர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவியின் பெயர் ஞானகலை. அவ்விருவருக்கும் சிவபெருமானுடைய திருவருளாலே திருவெண்காடர் என்னும் ஒரு புத்திரர் பிறந்தார்; பட்டினத்துப் பிள்ளையார் என்று சொல்லப்



படுபவர் இவரே; திருவெண்காடருக்கு ஐந்து வயதானபொழுது தகப்பனார் இறந்துவிட்டார்; சிறுவயசிற்றானே இவர் சகலசாத்திரங்களையும் நன்றாகப் படித்துச் சிவபெருமானிலே மிகுந்த அன்பு உள்ளவரானார்.

ஒருநாள், சிவபெருமான் இவருக்குக் கனவிலே தோன்றி, "நீ நாளைக்குத் திருவெண்காட்டுக்குப் போய் அங்குள்ள கோயிலிலே தீட்சை பெற்றுவா" என்றார். மறுநாள் இவர் விழித்தெழுந்து தாயாருக்குச் சொல்லிவிட்டுத் திருவெண்காட்டுக்குப் போய், அங்கே தீட்சை பெற்றுக்கொண்டு வீட்டுக்குத் திரும்பினார்.

இவர் பதினாறும்வயதில் அவ்வூரிலே சிவகலை என்னும் பெண்ணை விவாகஞ் செய்தார். முப்பது வயது வரைக்கும் பிள்ளையில்லாமலிருக்க, சிவபெருமானுடைய அருளினாற் சிவனடியார் ஒருவர் ஒரு பிள்ளையை இவருக்குக்கொடுத்தார். அந்தப் பிள்ளை சிறு வயதிலே சாத்திரங்களைப் படித்துச் சந்நியாசியாய்விட்டது; அதைக் கண்டு திருவெண்காடரும் சிவபெருமானே தமக்குத் துணை யென்று நினைத்துத் தம்முடைய வீட்டைவிட்டுச் சந்நியாசியாகி

ஒருமடத்திலே போயிருந்தார். இவர் அங்கே யிருந்து சிவபெருமானை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு தம் முடைய காலத்தைப் போக்கினார்.

சில நாளுக்குப் பின் இவருடைய தாயார் இறந்தார். இவரோ சந்நியாசி; இனத்தவர்களும் அந்நியரும் இவருக்குச் சரிதான்; உலகத்திலே ஒன்றிலும் பற்றில்லாதவர்; தாயிலே மாத்திரம் பற்றுள்ளவர். ஆதலால், இவர் தாயைச் சுடுகாட்டுக்குக் கொண்டுபோய் அவரை வியந்து பல பாட்டுக்கள் பாடித் தகனஞ் செய்தார். அப்பாடல்களுள் ஒன்று பின்வருமாறு:—

"நொந்து சுமந்துபெற்று நோகாமல் ஏந்திமுலை
தந்து வளர்த்தெடுத்துத் தாழாமே — அந்திபகல்
கையிலே கொண்டேன்னைக் காப்பாற்றுந் தாய்தனக்கோ
மெய்யிலே தீமூட்டு வேன்."

பின்பு, இவர் திருவிடைமருதூர் முதலிய பல கோயில்களுக்குப் போய்ச் சுவாமி தரிசனஞ் செய்து, வடநாட்டுக்குப் போய் ஒரு விநாயகர் கோயிலிலே சிவயோகஞ் செய்து கொண்டிருந்தார். சில கள்வர் அவ்வூர் அரசன் வீட்டிற் களவெடுக்கப் போனார்கள்: போகும்பொது கோயிலில்



விநாயகக் கடவுளை வணங்கி, "சுவாமீ, நாங்கள் களவெடுத்துத் தப்பிவிட்டோமானல் களவெடுக்கும் ஆபரணங்களில் ஒன்றை உமக்குத் தருவோம்; எங்களைக் காத்தருளும்" என்று நேர்ந்துகொண்டு போனார்கள். அப்படியே அவர்கள் களவாடித் திரும்புகையில், ஒரு முத்துமாலையைக் கோயிலுக்குக் கொண்டு போனார்கள். இருட்டாய் இருந்ததினால், கோயிலுக்குள் தியானத்தில் இருந்த பட்டினத்தாரையே விநாயகக் கடவுளென்று கள்வர் நினைத்து, அவர் கழுத்திலே மாலையை இட்டுவிட்டுத் திரும்பினார்கள்.

விடிந்த பின்பு, அரசனுடைய காவலாளர் கள்வரைத் தேடிப் பார்த்துக் கொண்டு போகும்போது, திருவெண்காடர் மேலே முத்துமாலை இருக்கக் கண்டு, கள்வரில் ஒருவன் என்று அவரைப் பிடித்துச் சிறைச்சாலையிலே வைத்தார்கள். வைத்தபின் இராசாவிடம் போய், "மகாராசாவே, ஆபரணங்களைத் திருடின கள்வன் அகப்பட்டிருக்கின்றான்; எங்களைக் கண்டதும் பெரிய ஞானியைப் போலக் கண்களை மூடிக்கொண்டிருந்தான்" என்று சொன்னார்கள்.

அரசனுகிய பத்திரகிரியார் இவரைக் களவெடுத்த குற்றத்திற்காகக் கழுவேற்றும்படி கட்டளையிட்டார். ஏவலர் இவரைக் கழுவேற்றுதற்காகக் கழுமரத்துக்குக் கொண்டு போனுர்கள். கழுமரத்தை யடைந்தவுடனே, இவர்:

"என்செய லாவ தியாதொன்று மில்லை யினித்தெய்வமே
உன்செய லேயேன் றுணரப்பெற் றேனிந்த வூனெடுத்த
பின்செய்த தீவினை யாதொன்று மில்லை பிறப்பதற்கு
முன்செய்த தீவினை யோவிங்ங னேவந்து மூண்டதுவே."

என்னும் பாட்டைப் பாடினுர். உடனே கழுமரம் நெருப்புப்பற்றி எரிந்தது. அது கண்ட இராசா, அவர் ஒரு சிவனடியார் என்றறிந்து, அவருடைய காலில் விழுந்து வணங்கி, அன்றைக்கே இராச்சியத்தை விட்டுத் துறவியாகிப் பட்டினத்துப் பிள்ளையாருடன் திரிந்தார்.

---

## கரு. தாமோதரர்

தாமோதரர் என்னும் பெரிய இரத்தின வியாபாரி ஒருவர் இருந்தார். அவர் வைத்திருந்த இரத்தினங்களெல்லாம் மிக விலையுயர்ந்தவை. அப்படியான இரத்தினங்களைப் பெரிய செல்வர்கள் மாத்திரம் வாங்கத் தக்கவர்கள். அவருக்கு நெடு நாளாக இரத்தினங்கள் விலைப்படவில்லை. அதனுலே அவருக்கு முட்டுப்பாடு வந்தது.



அந்த ஊரிலுள்ள இராசாவுக்குப் பட்டாபிஷேகம் நடக்கவேண்டி யிருந்தது. அன்றைக்கு அவர் அணிந்து கொள்ளுதற்கு ஒரு பதக்கஞ் செய்யப்பட்டு வந்தது. அதற்கு நடுவில் வைத்தற்கு இரத்தினங்கள் வேண்டியிருந்தன. இரத்தினங்களை வாங்குதற்காக இராசா தம்முடைய உத்தியோகத்தர் சிலரை அனுப்பினுர். அவர்கள் தாமோதரரிடம் போனுர்கள்; தமோதரர் தம்முடைய கடையிலிருந்த இரத்தினங்களை யெல்லாம் அவர்களுக்குக் காட்டினுர்.

அவர்கள் அவற்றிலும் பார்க்க ஒளியுள்ள இரத்தினங்கள் வேண்டுமென்று சொன்னுர்கள். அவர் அவர்களை அங்கே இருக்கும்படி சொல்லிவிட்டுத் தம்முடைய விலையுயர்ந்த இரத்தினங்களை எடுத்தற்கு வீட்டுக்குள்ளே போனுர். போய்ச் சொற்ப நேரத்தில் திரும்பி வந்தார். இரத்தினங்களைக் கொண்டுவரவில்லை. இரத்தினங்கள் எங்கேயென்று அவர்கள் கேட்டார்கள். அவர், "நான் என்ன செய்வேன்;

இப்போது அவைகளை எடுத்துக்கொள்ள முடியவில்லையே" என்றார்.

அரசனுடைய உத்தியோகத்தர்கள் "எங்களுக்கு இரத்தினம் அவசியம் தேவையாயிருக்கிறது; என்ன விலை சொன்னாலும் நாங்கள் தருவோம்; பணத்தைப் பெரிதாக நினைக்கமாட்டோம்" என்று சொன்னார்கள். அதற்குத் தாமோதரர், "இன்னும் இரண்டு மணி நேரத்தில் நீங்கள் வந்தால் ஒருபோது நான் அவைகளை உங்களுக்கு எடுத்துத் தரக்கூடும்; இப்போது எடுத்துத்தர இயலாது" என்றார்; அவர்கள் தங்களுக்கு இரத்தினங்கள் உடனே வேண்டுமென்றும், தாங்கள் தாமதிக்க முடியாதென்றுஞ் சொல்லிவிட்டுப் போனார்கள்.

தாமோதரருடைய மனைவி இவைகள் எல்லாவற்றையுங் கேட்டுக்கொண்டு இருந்தாள். இரத்தினம் வாங்க வந்தவர்கள் போனபின்பு, அவள், அவரிடம் போய், "இப்படியும் நீங்கள் செய்யலாமா? எவ்வளவு விலை சொன்னாலும் தருவோமென்று அவர்கள் சொன்னார்களே; அந்த இரத்தினங்களை யெடுத்து அவர்களுக்கு விற்றிருந்தால், எங்களுடைய வறுமை



தீர்ந்துபோமே" என்று வருத்தப்பட்டுச் சொன்னாள்; அதற்குத் தாமோதரர், "நீ சொல்வது சரிதான்; ஆயினும் நான் வீட்டைந் திறந்தபொழுது வீட்டுக்குள்ளே என்னுடைய தாயார் படுத்து நித்திரையாகக் கிடந்தார்; நான் சத்தம்பண்ணாமல் உள்ளே போதற்குக் கதவை மெதுவாய்த் திறந்தேன்; கதவு கிறீச்சிட்டது; அவர் நித்திரையிலே திடுக்கிட்டுப் போனார். கதவை இன்னுந் திறந்து உள்ளே போய்ப் பெட்டியைத் திறந்தால், அவர் விழித்துவிடுவார். அப்போது நான் யோசித்ததாவது ‘அவருடைய நித்திரையைக் கெடுத்து இரத்தினங்களை எடுத்துக் கொண்டுபோனால், எனக்குப் பணம் அதிகங் கிடைக்குந்தான். ஆயினும் இந்தப் பணம் பெரிதா? என் தாயாரின் நித்திரை பெரிதா? என்னுடைய உயிரைக் கொடுத்தும் எனது தாயாரைச் சுகமாக வைத்திருப்பது என்னுடைய கடன்; ஆதலால் அவருடைய நித்திரையை நான் கெடுக்கலாகாது எனச் சிந்தித்து மீண்டேன்" என்று சொன்னார்.

---

## ௧௬. **கௌசிகர்**

கௌசிகர் என்னும் ஒரு முனிவர் இருந்தார். அவர் ஒருநாள் ஓர் ஆலமர

நீழலிலே படுத்துக் கிடந்தார். மரத்தில் இருந்த ஒரு பறவை அவருக்கு மேலே எச்சமிட்டது; அவர் அந்தப் பறவையை உற்றுப் பார்த்தார். அது உடனே எரிந்து போனது. பறவை எரிந்ததைப்பற்றி அவர் மிகவுந் துக்கப்பட்டுக்கொண்டு அந்த இடத்தை விட்டுப் போனர்.

அவர் போகும்போது பசியுண்டாக, தெருவருகிலுள்ள ஒரு வீட்டுக்குப்போனர்; அங்கே பிச்சை தரும்படி கேட்டார். அந்த வீட்டிலிருந்த பெண், "சுவாமீ, இருந்து கொள்ளுங்கள்; உங்களுக்குப் பிச்சை இடுதற்காகப் பாத்திரந் தேய்த்துக் கழுவிக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனள்.

அவள் பாத்திரம் தேய்க்கப் போக, அவளுடைய புருஷன் வந்தான். அவள் பாத்திரம் தேய்க்கிறதைவிட்டு, அவனுக்குச் செய்யவேண்டிய பணிகளைச் செய்தாள். அவைகளைச் செய்து முடித்துவிட்டு, அவள் சாதத்தைக் கொண்டு போனள்; அவ்வளவு நேரமும் அவள் தம்மைத் தாமதிக்கச் செய்தாள் என்று முனிவர் கோபங்கொண்டார்; அந்த உத்தமியைச் சினந்து பார்த்தார். அவள் அதற்கு,

2953



"சுவாமீ, ஆலமரத்திலிருந்து எச்சமிட்ட குருவி என்று என்னை நினைக்கவேண்டாம்; நான் குற்றஞ் செய்திருந்தாற்றன் உமது பார்வை என்னை எரிக்கும். என்னுடைய நாயகர் எனக்குக் கடவுள். அவருடைய பணிகளைச் செய்வதே எனது முதற் கடன்; அவருடைய கருமங்களை யெல்லாம் இப்போதுதான் செய்து முடித்தேன். அதன் பின் நான் தாமதிக்கவில்லை" என்றுள்.

அவள் ஆலமரத்துப் பறவையின் கதையைச் சொன்னதனல், அவளை ஒரு ஞானி என்று அவர் விளங்கி, அவளுக்கு முன்னே மிகுந்த மரியாதையோடு நின்றுர். பின்பு அவளை நோக்கி, "அம்மையே, உங்களுக்கு இவ்வளவு ஞானம் வந்த வழி என்ன? நானும் ஞானத்தை அடைய விரும்புகின்றேன்; அதற்கு ஒரு வழி சொல்லல் வேண்டும்" என்று கேட்டார். அப்போது அவள், "சுவாமீ, என்னுடைய நாயகரைக் கடவுளாக மதித்து நடந்தபடியால், நான் இந்த நல்ல நிலையை யடைந்தேன்; நான் வேறொரு தவமுஞ் செய்யவில்லை நீர் ஞானத்தை அடைய விரும்பினல், மிதிலை நகரிலே ஒரு வேடர் இருக்கிறுர்; அவரிடத்திலே போய் அறிந்து கொள்ளலாம்" என்றுள்.

கௌசிகர் மிதிலைக்குப் போய் அந்த வேடருக்கு முன்னே நின்றார். வேடர் அவரைக் கண்டு அவருக்கு மிகுந்த மரியாதைகள் செய்து, "நீர் இங்கே வந்த நோக்கம் இன்னதென்று எனக்குத் தெரிகிறது" என்று சொல்லி, வீட்டுக்கு அவரை அழைத்துக்கொண்டு போனார். அங்கே அவருடைய தாயுந் தகப்பனும் இருந்தார்கள். அவர் அவர்களுடைய காலிலே விழுந்து கும்பிட்டுவிட்டுக் கௌசிகரைப் பார்த்து, "நான் வணங்குங் கடவுள் இவர்களே; நான் செய்கிற தவமெல்லாம் இவர்களுடைய பணிகள் தாம். இவர்களுக்கு வயதாய்விட்டபடியால், எவை பிரியமோ அவையெல்லாம் இவர்களுக்குச் செய்து கொண்டு வருகிறேன்; நீர் உம்முடைய தாய்தந்தையரை மதியாமல் தவஞ்செய்யப் போனபடியாற்றான் உமக்கு ஞானம் வரவில்லை; நீர் நெடுங்காலமாக வேதங்களைப் படித்தீர்; உம்முடைய தாய் தந்தையருடைய ஆசிர்வாதம் இல்லையாகவே, உமக்கு வேதங்களைப் படித்ததனால் வரும் பயனும் இல்லாமற் போய்விட்டது; ஆதலால், நீர் வீட்டுக்குப் போய் உம்முடைய தாய் தந்தையருக்கு மிகுந்த அன்போடு பணிகள் செய்யும்; அவர்களையே கடவுள்



என்று எண்ணி நடவும். இதனிலும் மேலான தவமாவது புண்ணியமாவது ஒன்றுமில்லை. இப்படிச் செய்தால் உமக்கு ஞானம் வரும்" என்றார்.

---

## ௪௭. மெய்ப்பொருள் நாயனார்

மலையமான் நாட்டிலே திருக்கோவலூரிலே ஓர் இராசா இருந்தார்; அவர் சிவனடியாரிலுஞ் சிவவேடத்திலும் அதிகப் பத்தி உடையவர். விபூதி உருத்திராக்கம் முதலிய சிவவேடங்களையே மெய்ப்பொருள் என்று மதிப்பவர். அதனால் அவருக்கு மெய்ப்பொருள் நாயனார் என்று பெயரானது.

அவர் தமது இராச்சியத்தை நீதி தவறாது ஆண்டுவந்தார். சிவாலயங்களிற் பூசை திருவிழாக்களை ஒரு குறையுமின்றி நடத்திவந்தவர். சிவனடியார்கள் அவரிடம் போனால் அவர்களை அன்பாய் உபசரித்து அவர்களுக்கு வேண்டியதைக் கொடுத்து வந்தார்.

இப்படி நடக்குங் காலத்திலே, முத்திநாதன் என்னும் ஓர் அரசன் அந்த மெய்ப்பொருள் நாயனாரோடு சண்டை செய்து பலமுறை தோற்றுப் போனான்.

அவன் நாயனுரைச் சண்டைசெய்து வெல்லுதல் முடியாதென்பதைக் கண்டு, அவரை வஞ்சனையால் வெல்லுதற்கு முயற்சி செய்தான். நாயனுர் சிவனடியாரிலும் சிவவேடத்திலும் அளவில்லாத அன்புள்ளவரென்பதை முத்திநாதன் அறிந்திருந்தான்.

ஒருநாள் அவன் விபூதியைச் சரீரம் முழுவதும் பூசிச் சடைகளை முடித்துக் கட்டிக் காவியுடை அணிந்து, ஒருபுத்தகப் பையுள்ளே ஓர் ஈட்டியை மறைத்துக் கட்டிக்கொண்டு நாயனுருடைய அரமனைக்குப் போனுன். மாளிகையின் காவற்காரர் அவனைச் சிவனடியார் என நினைத்து உள்ளே போகவிட்டார்கள். கடைவாயிலில் நின்ற தத்தன் என்னும் சேவகன் "சுவாமீ, இராசா இப்பொழுது நித்திரை செய்கிருர்; எழும்புஞ் சமயம் அறிந்து போதல் வேண்டும்" என்றுன்.

அதற்கு முத்திநாதன் "நான் அவருக்கு ஞானநூல் படிப்பிக்கப்போகிறேன்; என்னைத் தடுக்க வேண்டாம்" என்று சொல்லி உள்ளே போனுன். அங்கேயிருந்த நாயனுரின் மனைவியார் அவரை எழுப்பினுர். அவர் எழுந்து அவனைச் சிவனடியார் என்று நினைத்துக் கும்பிட்டு, சுவாமீ,



இங்கே எழுந்தருளிய காரணம் யாது?" என்று கேட்டார். அதற்கு முத்திநாதன் "வேறு எவரிடத்திலும் இல்லாத ஓர் ஆகமத்தை உமக்குப் போதித்தற்காகக் கொண்டுவந்தேன்" என்றுன்.

நாயனுர் மிக மகிழ்ந்து, "சுவாமீ, அடியேனுக்கு அதைப் போதித்தருளல் வேண்டும்" என்றுசொல்லிச்சிவனடியாரை ஆசனத்தில் இருத்தித் தாம் கீழே இருந்தார். நாயனுர் முத்திநாதனை வணங்கிக் கொண்டிருக்கையில், அவன் புத்தகத்தை எடுப்பவன்போல், தான் மறைத்து வைத்திருந்த ஈட்டியை எடுத்து, அதனுல் நாயனுரைக் குற்றினுன். அதை அறிந்த தத்தன் ஓடிவந்து தன் கை வாளினுற் பாதகனுகிய முத்திநாதனை வெட்டப் போனுன்: அப்பொழுது மெய்ப்பொருள் நாயனுர் தத்தனைப் பார்த்து, 'தத்தா, இவர் சிவனடியாராதலால் இவருக்கு ஒரு துன்பமுஞ் செய்யாதே" என்றுர்.

தத்தன் நாயனுரைப் பார்த்து, "சுவாமி, அடியேன் செய்யக்கூடிய ஏவல் யாது?" என்றுன். நாயனுர் "வழியிலே ஒருவரும் இவருக்குத் துன்பஞ் செய்யாதபடி இவரை

அழைத்துக் கொண்டுபோய் நம் ஊரெல்லையில் விட்டுவா" என்றார். "சிவனடியார் ஓர் இடையூறுமின்றிப் போய்விட்டார்" என்ற செய்தி அறியவேண்டும் என விரும்பி நாயனார் உயிருடன் இருந்தார். முத்திநாதன் இராசாவைக் கொன்ற செய்தியை அறிந்த சனங்கள் முத்திநாதனைக் கொல்ல வந்தார்கள்; ஆயினும் தத்தன், இச்சிவபத்தருக்கு ஒரு துன்பமுஞ் செய்யக்கூடாதென இராசா கட்டளையிட்டார்" என்று சொல்லி அவர்களைத் தடுத்தான்.

தத்தன் முத்திநாதனை ஊர் எல்லையில் விடுத்து, நாயனார்முன் வந்து நின்று "சுவாமீ, சிவபத்தருக்கு இடையூறு ஒன்றும் நேராதபடி கொண்டுபோய் விட்டேன்" என்றான். அப்போது மெய்ப்பொருள் நாயனார், "இன்றைக்கு நீ செய்த உபகாரத்தை வேறு யார் செய்ய வல்லவர்" என்று சொல்லித் தத்தனை அன்புடன் பார்த்தார். பின்பு அவர் தம்முடைய குமாரர்களையும் மந்திரிமார்களையும் அழைப்பித்தார். வேத ஆகமங்களிற் சொல்லியபடி விபூதிமேல் வைத்த அன்பை வளர்க்கும வண்ணம் அவர்களுக்குப் போதித்து நடராசப்பெருமானைத் தியானம்பண்ணினார். உடனே நடராசப்பெருமான் தோன்றி



அவரைத் தம்முடைய திருவடியிலே சேர்த்தருளினார்.

---

## கஅ. சிபிச் சக்கரவர்த்தி

சிபி என்றொரு சக்கரவர்த்தி இருந்தார். ஒருநாட் பின்னேரம் அவர் தம்முடைய முதன் மந்திரியோடு அரமனை வாயிலில் நின்றார். அப்போது ஒரு மறவன் புறுவொன்றைக் கையிலே கொண்டுபோனான். சிபிச் சக்கரவர்த்தி அவனை யழைத்து, "இந்தப் புறு விற்கவா? வளர்க்கவா? கொன்று உண்ணவா?" என்று கேட்டார்.

"மறவர்கள் பிடிக்கிற பறவைகளை, விற்பதுமில்லை; வளர்ப்பதுமில்லை" என்று அவன் சொன்னான். அப்போது இராசா மறவனைப் பார்த்து, "நீ அதைக் கொல்லலாமா? அதுவும் உன்னைப்போல ஒரு சீவன்தானே; உனக்கு ஒரு முள்ளுத் தைத்தால் நீ எவ்வளவு வருத்தப்படுகிறாய்? நீ அதைக் கொல்லுவது சரியா? கொல்லாமல் அதைப் பறக்கவிடு" என்றார்.

அப்போது மறவன் "மகாராசாவே, உங்களுடைய சொல்லை நான் தட்டத் தக்கவனல்லேன்: எனக்கு இந்தநியாயங்கள்

ஒன்றும் வேண்டாம்; இப்போது இதைப் பறக்கவிட்டால், நான் இன்றைக்கு உண்ணாமற் பசி கிடக்கவேண்டி வருமே; அது தங்களுக்கு நீதியா?" என்றான்.

இராசா, "உனக்குச் சோறு தருவேன்" என்று சொன்னார். மறவன், தான் சோறாவது, காய் கறிகளாவது ஒருபோதும் உண்பதில்லை என்றான். அவன் சோற்றையே உண்ணவேண்டும் என்றும், பறவைகளை உண்பது பாவம் என்றும் இராசா சொன்னார். "எதுவா யிருந்தாலும் நான் ஒருகாலமும் உண்ணாத உணவை உண்ணப்போகிறதில்லை" என்று மறவன் பிடிவாதமாய் நின்றான். இராசா சற்றுநேரம் யோசித்துவிட்டு மறவனைப் பார்த்து, "உனக்கு நான் இறைச்சி தருவதானால், ஏதாயினும் ஒரு பிராணியைக் கொல்லல் வேண்டும்; நான் ஒரு சீவனையும் கொல்லமாட்டேன்: இந்தப் புறா அளவு கனமுள்ள தசை எனது சரீரத்திலிருந்து வெட்டித் தருகிறேன்" என்று சொன்னார்.

அதற்கு மறவன் சம்மதிக்க, அவர் ஒரு தராசு கொண்டுவரும்படி மந்திரியிடங் கட்டளை செய்தார். மந்திரி மறவனை மிகவுங் கோபித்துப் பார்த்துவிட்டுப் போய்



ஒரு தராசு கொண்டுவந்தான். இராசா அந்தப் புறாவைக் கட்டி ஒரு தட்டிலே வைத்துவிட்டு, தமது தொடையிலிருந்து ஒரு பெரிய துண்டு தசையை வெட்டி மற்றத் தட்டிலே இட்டார். வெட்டிய தசை போதவில்லை. இராசா பின்னும் ஒருதுண்டு தசையை வெட்டித் தட்டிலே இட்டார்; அதுவும் போதவில்லை; புறாவினுடைய பாரம் மிக அதிகமாய் இருந்தது; "இது என்ன ஆச்சரியம்" என்று நினைத்துக் கொண்டு பின்னும் ஒருதுண்டு வெட்டித் தட்டிலே இட்டார்; பின்னும் போதவில்லை: உடலிலிருந்து தசையை வெட்ட வெட்ட இரத்தம் அதிகமாகப் பாய்ந்தது; இராசாவுக்குக் களை உண்டானது; பின்னும் அவர் ஒரு துண்டு வெட்டுதற்குக் கையையெடுத்தார்.

நின்ற மறவனைக் காணவில்லை. "சிபிச் சக்கரவர்த்தியே, பொறு! பொறு! இவ்வளவும் போதும்; உனது சரீரம் முன்போலாகுக; நான் படைத்த உயிர்களிலே நீ அதிக அன்புள்ளவனாய் இருப்பதால், நான் உன்னை விரைவாக என்னோடு சேர்த்துக் கொள்ளுவேன்; இன்னுஞ் சொற்ப காலத்தில் நீ என்னுடைய பாதத்தை அடைவாய்" என்று ஓர் அசரீரி வாக்குப்

பிறந்தது; சிபியினுடைய சரீரம் முன்போலானது. "மறவனாக வந்தவர் சிவபெருமானே" என்று சிபி உணர்ந்து அவரைத் தோத்திரஞ் செய்தார்.

———

## ௧௧. கிரிசாம்பாள்

அநேக வருஷங்களுக்கு முன்னே ஒரு தேசத்திலே பஞ்சமுண்டாயது. பல ஏழைகள் உணவின்றி வருந்தினார்கள். அநேக சிறு பிள்ளைகள் பட்டினியால் வருந்தியதைப் பார்க்க மிக்க பரிதாபமாய் இருந்தது.

அவ்வூரிலே இருந்த ஒரு பிரபு அச்சிறு பிள்ளைகளில் இரக்கங் கொண்டு அவர்களில் இருபது பேரைத் தமது வீட்டிற்கு அழைத்தார். அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு மோதகங் கொடுக்கும்படி அவர் கட்டளையிட்டார். மோதகமெல்லாம் ஒரு கூடையில் அவர்கள் முன் வைக்கப்பட்டன. அந்தப் பிரபு அவர்களைப் பார்த்து, "பிள்ளைகளே, நீங்கள் இந்த மோதகங்களில் ஒவ்வொன்று எடுத்து உண்ணுங்கள்; இப்படியே பஞ்சம் முடியும்வரையும் இங்கே வாருங்கள்; நான் உங்களுக்கு மோதகந் தருவேன்" என்றார்.



"மோதகத்தை எடுங்கள்" என்று பிரபு சொன்னவுடனே, பிள்ளைகள் பெரிய மோதகங்களை எடுத்தற்காக முற்பட்டு நெருங்கிவந்து கூடைமேல் விழுந்து தள்ளுண்டு இடியுண்டு ஒவ்வொன்றை எடுத்துக்கொண்டு ஓடினார்கள். அந்தப் பிரபு அவர்களுக்குச் செய்த நன்மைக்காக அவர்கள் அவருக்கு நன்றி சொல்ல நினைக்கவுமில்லை.

கிரிசாம்பாள் என்னும் ஒரு சிறுமி மாத்திரம் தனியே நின்றாள். அவள் மற்றையோர்களைப்போல இடிபட, இழுபட, தள்ளுப்படப் போகவில்லை. அவள் கூடைக்குச் சிறிது தூரத்திலே பொறுமையாய் நின்றாள். அந்தக்கூடையில் ஒரு சிறு மோதகம் மாத்திரம் இருந்தது. அவள் பிரபுவைப் பார்த்து முகமலர்ச்சியோடுந் தாழ்மையோடும் அவருக்குந் துதி சொல்லிவிட்டு, அந்தச் சிறிய மோதகத்தை எடுத்துக்கொண்டு போனாள்.

இதைப் பார்த்துக்கொண்டிருந்த பிரபுவுக்கு அவளிலே பற்றுண்டானது. அடுத்த நாள் எல்லாப் பிள்ளைகளும் வந்தார்கள்; கூடை நிறைய மோதகம் இருந்தது; முதல் நாட்போலவே பிள்ளைகள் தள்ளுப்பட்டு

நெரிபட்டுப் பெரிய மோதகங்களை எடுத்துக் கொண்டு ஓடினார்கள். பொறுமையாய்த் தூரத்தில் நின்ற கிரிசாம்பாளுக்கு மற்றைய மோதகங்களின் பாதியளவு மில்லாத ஒரு சிறு மோதகங் கிடைத்தது; அவள் அதை எடுத்துக்கொண்டு பிரபுவுக்கு உபசாரஞ் சொல்லிவிட்டுப் போனாள்.

மோதகத்தைக் கொண்டுபோய் வழக்கப்படி தாயிடம் கொடுத்தாள். தாய் அதைப் பிரித்தபோது, அதற்குள் இருந்த ஆறு வெள்ளி ரூபாக்கள் கலீரென்று விழுந்தன. தாய் மகளை நோக்கி, "கிரிசா, இது என்ன மோசம்? ஏதோ தவறுதலினால் இந்தக் காசு இதற்குள் வந்துவிட்டது; மோதகம் எங்களுக்குரியது; பணம் எங்களுக்குரியதன்று; ஆதலால் இதை விரைவாய்க் கொண்டுபோய்ப் பிரபுவிடங் கொடுத்து விடு" என்று அனுப்பினாள்.

கிரிசா பணத்தைக் கொண்டுபோய்ப் பிரபுவிடங் கொடுக்க, பிரபு அவளைப் பார்த்து, "மகளே, நான் இப்பணத்தை மோதகத்துள் தவருக வைக்கவில்லை; உன்னுடைய பொறுமையையும் சாந்த குணத்தையும் மெச்சி, அதற்கு வெகுமதியாக உனக்குக் கிடைக்கும் மோதகத்திற்குள் இப்பணத்தை வைப்பித்தேன்; நீயே அதை எடுத்துக்கொள்; பெரிய மோதகம் வேண்டுமெனச் சண்டையிடாமல் தனக்குக் கிடைத்தது போதும் என்று எண்ணித் திருப்தியடையும் பிள்ளைக்கு மோதகத்திற்குட் கிடைத்த பணத்தினும் ஆயிரம் மடங்கு மேலான வெகுமதி கடவுளாற் கிடைக்கும்" என்றார். கிரிசா பணத்தை ஏற்றுக்கொண்டு மீண்டாள்.



---

## உ௦. ஒரு குருவும் மகனும்

மாசி மாதத்தில் வருகிற அமாவாசைக்கு முதல் நாள் மகாசிவராத்திரி என்று சொல்லப்படும். அந்தநாள் கடவுள் வழிபாட்டிற்கு மிகவுந் தகுதியான நாள். சைவசமயிகள் அன்று பகல் ஒன்றும் உண்ணமலிருந்து கடவுளைத் தியானிப்பதில், அல்லது வேறு புண்ணியமான செய்கைகளிற் பொழுது போக்குவார்கள். மற்றைய நாட்களிற் பெருங்குற்றஞ் செய்பவர்களும் அன்றைக்கு நீதியாக நடக்க நினைப்பர். இராமுழுவதும் கடவுள் வழிபாட்டிலே கழியும். அன்றைக்குக் கோயில்களிலே நான்கு யாமமும் பூசை நடக்கும். பகலிலே வேறுமுயற்சி யுள்ளவர்களும் இரா

முழுவதுஞ் சிவபெருமானை வணங்கு
வார்கள்; அதற்காக அன்றிரவு நித்திரை
கொள்ளலாகாது என்று பெரியோர் சொல்
லுவர். கோயில்களிலே அன்றிரவு பூசை
நேரந்தவிர மற்றைய நேரங்களிற் புராணம்
படித்துப் பொருள் சொல்வது வழக்கம்.

சிவராத்திரி தினத்தில் ஒருகோயிலிலே
புராணம் படிக்கப்பட்டது. குருக்களுடைய
மகன் பாட்டுக்களை வாசிக்கக் குருக்கள்
கருத்துச் சொன்னார். சற்று நேரஞ்
சென்றபின் புராணங் கேட்டவர்கள் பலர்
உறங்கினார்கள். கடைசியில் எல்லாரும்
நித்திரையாய்விட்டார்கள்; இதைக் குருக்க
ளுடைய மகன் கண்டு தகப்பனாரைப்
பார்த்து, "ஐயா, இந்தச் சனங்களெல்லாம்
உறங்குகின்றார்களே; சிவராத்திரியில்
நித்திரை செய்வதே குற்றம்; கோயிலில்
நித்திரை செய்வது அதிலுங் குற்றம்;
புராணங் கேட்க வந்தவர்கள் நித்திரை
செய்வது இன்னும் அதிகக் குற்றம்; இவர்
கள் சிவராத்திரியிற் கோயிலிலே புராணம்
படிக்கும்பொழுது நித்திரை செய்தல்
எவ்வளவு பெரிய குற்றம்" என்றான்.

அதுகேட்ட குருக்கள் "மகனே,
'பழிப்பன பகரேல்' என்று ஔவையார்



சொல்லியிருப்பது தெரியாதா? நீ இப்போது
அவர்களிலே குற்றஞ் சொல்லியது
அவர்கள் செய்த குற்றத்திற் பெரிய
குற்றம்; இந்தச் சிவராத்திரி தினத்திலே
விழித்திருந்து புராணம்படித்த புண்ணியப்
பேற்றினும், இவர்களிலே குற்றஞ்
சொல்லியதால் வந்தபாவம் அதிகமானது.
பிறரிலே உள்ள குற்றத்தை மற்றை
யோர்க்கு ஒருபோதுஞ் சொல்லாதே;
எங்கள் ஒவ்வொருவரிலும் நூற்றுக்
கணக்கான குற்றங்கள் உள்ளன; அவை
ஒவ்வொன்றையும் ஆராய்ந்து அறிந்து
அவைகளை விலக்குதல் எங்களுடைய
கடனும்; எங்களுடைய குற்றங்களையறிந்து
அவைகளை நீக்குதற்கே போதிய நேரம்
எங்களுக்கில்லை. மற்றையவர்களிலுள்ள
குற்றத்தை ஆராயத் தொடங்கினால்
எங்களுக்குக் காலமும்வராது; ஆதலினாலே,
பிறரிலே குற்றஞ் சொல்வது மிகப் பெரிய
குற்றமாய் முடிகின்றது; இவர்களைக்
குற்றஞ் சொன்னதினாலே, உன்னுடைய
விரதபலன் போய்விட்டது; ஒருநாளும்
பிறர்மேற் குற்றஞ் சொல்லாதே; நீ ஒரு
மனுஷனாய் வந்தபின் உனக்குக் கீழ்ப்
பட்டவர்கள் இருந்தால், அவர்களைத்
திருத்துதற்காக அவர்களுடைய குற்

றத்தை அவர்களுக்கு எடுத்துக்காட்டலாம். ஒருவருடைய குற்றத்தை மற்றொருவருக்குச் சொல்லுவதினால் என்ன பலன் ?" என்றார். மகன் அவர் சொல்லியதைக் கேட்டு அப்படியே நடந்தான்.

---

## உக. துளசித்தாமர்

துளசித்தாமர் என்றொரு பெரிய பிரபு இருந்தார்; அவருடைய தோட்டங்களிலே வேலைக்காரராய் ஆயிரத்தைந்நூறு பேர் இருந்தார்கள். அவருக்கு ஓர் ஆண் குழந்தை மாத்திரம் இருந்தது. அந்தக் குழந்தை அங்கேயுள்ள வேலைக்காரர்களுடைய பிள்ளைகளுடனே விளையாடுவது வழக்கம். ஒருநாள் அந்தச் சிறுவன் ஒரு வேலைக்காரனின் பிள்ளையோடு விளையாடிக் கொண்டிருந்த பொழுது, இரண்டு பேருக்குஞ் சண்டை யுண்டானது. கூலிக்காரனுடைய சிறுவன் வயதில் அதிகம் மூத்தவன். ஆனபடியால் அவன் இவனுக்கு உறைக்க அடித்துவிட்டான். இவன் அழுதுகொண்டு போய்த் தாயிடம் முறையிட்டான்.

தாயானவள் "எம்முடைய அருமையான ஒரே குழந்தைக்கு இந்தக் கூலியானவன்



பிள்ளை கை நீட்டலாமா" என்று துக்கப்பட்டு, "தம்பீ, நீ அழாதே; நான் உன்னுடைய அப்பரிடஞ் சொல்லி அந்தச் சிறுவனுக்கு நல்லஅடி வாங்கிக் கொடுக்கிறேன்" என்று துளசித்தாமரிடம் மகனைக் கூட்டிக்கொண்டு போனாள்.

துளசித்தாமர், "இவன் ஏன் அழுகிறான் ?" என்று கேட்டார்; அதற்கு மனைவி, இராமனுடைய மகனோடு தம்பி விளையாடிக்கொண்டிருந்தபோது அவன் அடித்தான்" என்றாள்; "அப்படியானால் இவனும் ஏதோ குற்றஞ் செய்திருக்க வேண்டும்; இவனிலே சற்றேனும் குற்றமில்லாவிட்டால் இவனுக்கு அவன் அடிக்கமாட்டான்; இரண்டு கையுஞ் சேர்ந்து தட்டினாற்றான் சத்தமுண்டாகும், ஒற்றைக் கையை எவ்வளவு பெலமாக வீசினாலுஞ் சத்தமுண்டாகாது; அதுபோல இரண்டுபேர் கூடியிருக்கும் பொழுது ஒருவன் எவ்வளவு கெட்டவனாயிருந்தாலும் மற்றவன் பிழையொன்றுஞ் செய்யாவிட்டால் அவர்களுக்கிடையிலே சண்டையுண்டாகாது. நம்முடைய மகனும் ஏதோ பிழை செய்துதான் இருக்கவேண்டும்" என்று துளசித்தாமர் சொன்னார்.

அதற்கு மனைவி "நமது பிள்ளை பிழை செய்தாலும், அந்த அற்பக்கீழ்சாதிப்பிள்ளை பொறுத்துக் கொள்ளக் கூடாதா? நமது பிள்ளையின்மேல் அவன் தொடலாமா? இந்த அடிமை கைநீட்டின பொழுதே எங்களுடைய மரியாதை யெல்லாம் போய் விட்டதே. இந்த அடிமைகள் இனிமேல் எம்மை மதிப்பார்களா?" என்றாள்.

துளசித்தாமர் "புத்தியீனமாய்ப் பேசாதே; 'அவன் கீழ்சாதி' என்று நீயே சொல்லுகிறாய்; தாழ்ந்தவர்கள் செய்கிற குற்றத்தைப் பொறுப்பது உயர்ந்தவர்களுடைய கடன்; 'சிறியோர் செய்த சிறு பிழையெல்லாம், பெரியோராகிற் பொறுப்பது கடனே' என்ற வாக்கியந் தெரியாதா? இரண்டாவது 'அவர்கள் நம்மை மதிப்பார்களா' என்று சொல்லுகிறாயே; அவர்கள் நம்மை மதிப்பதினால் நமக்கு என்ன பிரயோசனம்? கடவுள் நமக்கு இவ்வளவு பாக்கியத்தைத் தந்திருக்கிறபடியால், கடவுளுடைய நீதிப்படியல்லவா நாம் நடத்தல்வேண்டும்?" என்று மனைவிக்குச் சொன்னார்; பின் தம் பிள்ளையைப் பார்த்து, "தம்பி, நீ ஏதோ குற்றஞ் செய்துவிட்டாய்; ஆதலினால், நீ அந்த அடிமை



யிடம் போய் அவனைச் சந்தோஷப்படுத்தல் வேண்டும்; நாலு மோதகமும் இரண்டு வாழைப்பழமும் அவனுக்குக் கொடுத்து அவனைச் சந்தோஷப் படுத்திக்கொண்டு வா' என்றார்.

சிறுவன் அப்படியே மோதகமும் வாழைப்பழமுங் கொண்டுபோய் அந்த அடிமைக்குக் கொடுத்தான்; அவ்வடிமை மிகவும் பயந்து துக்கப்பட்டு அவனைக் கும்பிட்டு "நான் குற்றஞ்செய்ய நீர் என்னைச் சந்தோஷப்படுத்துகிறீரா? என்னுடைய அற்ப புத்தியினால் நான் உமக்கு அடித்தேன்; அதைத் தயை செய்து பொறுத்துக்கொள்ளல் வேண்டும்" என்று சொல்லிக் குறையிரந்தான்.

---

## ௨௨. விலையுயர்ந்த இரத்தினம்

விசய நகரத்திலே ஒரு பிரபு இருந்தார். அவருக்கு மூன்று பிள்ளைகள் இருந்தார்கள். அவரிடத்திலே விலையுயர்ந்த ஓர் இரத்தினம் இருந்தது; அதைத் தமது பிள்ளைகளுள் அதிக நற்குணமுடையவனுக்குக் கொடுக்க வேண்டும் என்று எண்ணிக் கொண்டிருந்தார். ஒரு

நாள் பிள்ளைகள் மூவரையும் அழைத்து, "பிள்ளைகளே, சென்ற மூன்று மாதங்களுள்ளே உங்களில் யார் அதிகம் மேன்மையான செய்கையைச் செய்திருக்கிறீரோ, அவருக்கே அதிகம் விலையுயர்ந்த இந்த இரத்தினத்தை உபகாரமாகக் கொடுப்பேன்" என்றார். உடனே ஒவ்வொருவரும் தாம் செய்த மேன்மையான செயலைச் சொல்லத் தொடங்கினர்.

மூத்த மகன் தகப்பனைப் பார்த்து, "ஐயா, சென்றவாரம் ஒரு வியாபாரி என்னிடம் விலையுயர்ந்த அநேக ஆபரணங்களை ஒருவரிடங் கொடுக்கும்படி தந்தான். தரும்பொழுது ஆபரணங்களை அவன் எண்ணிக் கணக்கிடவில்லை; நான் அவைகளுள் ஒன்றை அல்லது இரண்டை எடுத்திருந்தால் நான் அதிகப் பணக்காரனுதல் கூடும். ஆயினும் நான் அப்படிச் செய்யவில்லை. என்னுடைய பொருள்போல அதைச் சாவதானமாகக் கொண்டுபோய்க் கொடுத்தேன்; இது மேன்மையான செயலல்லவா? எல்லாரும் இப்படிச் செய்வார்களா?" என்றான்.

தகப்பனார் "நீ நேர்மையாய் நடந்தாய் என்பதற்குத் தடையில்லை. அது மிகவுஞ் சரி; ஆயினும் எந்த யோக்கியனும் இப்படித்தானே செய்வான்; இதிலே ஒரு விசேஷமுமில்லை" என்று சொன்னார்.



இரண்டாம் மகன் தகப்பனைப் பார்த்து, "நான் ஒரு குளக்கரை வழியே நடந்து போகையில் அங்கே விளையாடிக் கொண்டிருந்த ஒரு பெண் குழந்தை தவறிக் குளத்துள் விழுந்துவிட்டாள்; நான் என்னுடைய சீவனையும் பொருட்படுத்தாமல், உடனே அக் குளத்துட் குதித்துத் தண்ணீருக்குக் கீழே போய்க் குழந்தையை எடுத்து, அழுதுகொண்டு நின்ற தாயிடம் கொடுத்தேன்" என்றான். தகப்பன் "நீயும் உனது கடமையைச் செய்தாய்; நீரில் அமிழ்ந்திப்போகும் எந்தப் பிராணியையும் தப்பவைக்க எவனுக்கும் மனம் வரும்; நீ அப்படிச் செய்ததில் என்ன விசேஷ மிருக்கிறது?" என்றார்.

மூன்றும் மகன் தகப்பனைப் பார்த்து, "நான் ஒரு மலையில் ஏறினேன்; அந்த மலையில் ஒரு 'செங்குத்'தான கற்பாறையில் என்னுடைய பகைவன் நித்திரையாய்க் கிடந்தான். அவன் எனக்கு அநேக தீங்குகளைச் செய்திருந்தான்; என்னைக் கொல்லுகிறதற்குஞ் சமயம் பார்த்துக்

கொண்டிருந்தவன்; நான் அவனை அந்த இடத்தில் விட்டுப்போனால், நித்திரையில் ஒருபக்கத்துக்குத் திரும்புவானாகில் உடனே கீழே விழுந்து இறந்து விடுவான்; அவன் செத்தால் எனக்கென்ன என்று நான் நினைக்கவில்லை. என்னுடைய மனத்தில் ஏதோ இருந்துகொண்டு அவனைத் தப்ப வைக்கும்படி ஏவினது. அவனை எழுப்பினால் தன்னுடைய நித்திரையைக் குழப்பி விட்டேனென்று கோபிப்பா னென்பதும் எனக்குத் தெரியும். ஆயினும் நான் உடனே போய் அவனை மெல்ல எழுப்பினேன்; அவன் கோபித்தான், ஆனாலும், நான் காரியத்தைச் சொல்லி அவனை நித்திரை தெளியப்பண்ணி, அவ்விடத்திலிருந்து கூட்டிக்கொண்டு போய் ஒரு பாதுகாப்பான இடத்திற் படுக்கவிட்டேன்" என்றான்.

தகப்பனார் மகனைத் தம் மார்போடு அணைத்து முத்தமிட்டு, "நீ செய்ததுதான் மேலான செய்கை; எங்களுக்குத் தீமை செய்கிறவர்களுக்கும் பதில் உபகாரங் கருதாமல் நன்மை செய்வதே மேன்மையான குணம்" என்று சொல்லி, அந்த விலையுயர்ந்த இரத்தினத்தை அவனுக்கே உபகாரமாகக் கொடுத்தார்.

---



## ௨௫. ஒரு புலையன்

கூடலூரிலே ஒரு புலையன் இருந்தான். அவனுக்கு மனைவி மக்கள் இல்லை; பொருள் பண்டமு மில்லை. அவனைக் குட்டரோகம் என்னுங் கொடிய நோய் பிடித்துக் கொண்டது. அதனாலே அவன் கூலி வேலை செய்ய இயலாமல் இருந்தான். வீட்டுக்கு வீடு போய்ப் பிச்சை எடுத்துச் சீவித்து வந்தான். அந்தக் குட்டரோகத்தினாலே அவனுடைய கை விரல்களும் கால் விரல்களும் அழுகி விழுந்தன. அதனால் அவன் நடக்க இயலாமற் போனான்; பிச்சைக்குப் போகவும் முடியாது. அயலவர்கள் யாரேனும் இரங்கி ஏதாவது கொண்டுபோய்க் கொடுத்தால் உண்பான்; யாருங் கொடா விட்டாற் பட்டினியாயே கிடப்பான். அவனுடைய நோய் வேதனையோ தாங்க முடியாதது; அதனோடு பசிவருத்தமும் வந்தால் அவன் எவ்வளவு பாடுபடுவான்.

அவனுக்கு ஒரு தம்பி இருந்தான். அவன் சிறு வயதிலே பாதிரிமார் வைத்து நடத்தும் பஞ்சமர் பள்ளிக்கூடத்திலே படித்தவன். அப்படிப் படிக்குங் காலத்திலே, பாதிரிமார் அவனைக் கிறீஸ்தவனாக்கிவிட்டார்கள். பின்பு அவன் ஒரு

பாதிரியாருக்குச் சமையற்காரனுயிருந்தான். அவன் ஒரு நாள் தமையனைப் பார்க்க வந்தான். தமையன் படுகிற வருத்தங்களைக் கண்டு, அவன், "அண்ணே, நீ படுகிற பாட்டைப் பார்க்க எனக்கு வயிறு எரிகின்றது; நீ உணவின்றிப் பசி கிடக்க, நான் உண்ண மனம் வருமோ? ஆயினும் உனக்கு ஏதும் உதவி செய்யவும் என்னுல் இயலாது. பாதிரியார் எனக்குத் தருகிற சம்பளம் என் மனைவி மக்களுடைய உணவிற்குப் போதாது; நான் ஒரு வழி சொல்லுகிறேன்; நீ அப்படி நடந்தால் நல்ல சுகமாய் இருப்பாய்; நீ என்னேடு வந்து பாதிரியார் வீட்டில் இருந்துகொள்; திருநீறு பூசுவதை மாத்திரம் விட்டுவிடு; நான் பாதிரியாரிடஞ் சொல்லிச் சோறும் சீலையும் உனக்குக் குறைவில்லாமல் வாங்கித் தருவேன்" என்றுன்.

அதற்குத் தமையன், "அடா பாவி! என்ன பாதகமான கதை சொல்லுகிருய்! உலகத்திலே எதை மறந்தாலும் திருநீற்றையும் நான் மறப்பேனு? பாதிரியார் என்னளவு உயரத்திற்குத் தங்கக் காசுகளைக் கொண்டுவந்து எனக்கு முன்பு குவித்தாலும், நான் திருநீற்றை விடமாட்டேன்; அன்றியும் திருநீற்றை நான்



மறந்தால், எமது பிதாவாகிய சிவபெருமானை மறக்கிறதாய்முடியுமே; சிவபெருமானை மறந்தால், நான் எப்படி உய்வேன்? அவரல்லவோ என்னுடைய உயிருக்கு உயிராயுள்ளவர். நான் முற்பிறப்பிலே ஏதோ பெரும் பாவஞ் செய்தபடியால், இப்போது இவ்வளவு வருத்தங்களையும் துன்பங்களையும் அனுபவிக்கின்றேன். ஆதலால் இந்தப் பிறவியிலாவது நான் யோக்கியனுய், சிவபத்தி யுள்ளவனுய் இருந்தால், இனிமேல் வருகிற பிறவிகளிலே சுகமாய் இருக்கலாம். முன்செய்த பாவங்களுக்காக இப்போது நான் துன்பப்படுகிறேன். இதைக் கண்டுகொண்டு இனிமேலும் நான் துன்பப்படத்தக்கதாகப் பாவஞ் செய்வேனே? விடிந்துந் தடுமாற்றமா? ஒரு வயிறு சோற்றுக்காகக் கடவுளை மறக்கிறவன் முழுப் பைத்தியகாரனல்லவா? நாளைக்குச் சாகிற உடம்பு உணவில்லாவிட்டால் இன்றைக்குச் சாகும்; அதனுலே பெரும் நஷ்டமில்லையே. கடவுளை மறந்தால் எப்போதும் உள்ளதாகிய ஆன்மா எத்தனையோ பிறவிகளில் அளவில்லாத துன்பத்தை அடையும். திருநீற்றையாவது சிவபெருமானையாவது நான் ஒருபோதும் மறவேன்; நீ எனக்கு நல்ல

புத்தி சொல்லவேண்டாம்; நீ ஒரு பெரும் பாதகன்; என்னுடைய காரியம் பார்க்க எனக்குத் தெரியும்; சிவபெருமான் எனக் குத் துணையாக இருக்கிறபொழுது மற்றை யவர்களுடைய உதவி எனக்குத் தேவை யில்லை; நீ போ" என்றான்.

---

## உச. ஓர் உபாத்தியாயர் I

மிலேச்ச கண்டத்திலே பெயர்பெற்ற ஒரு சர்வகலாசாலை உண்டு. அதிலே ஓர் உபாத்தியாயர் இருந்தார்; அவர் ஒரு கல்விக்கடல். விவேகத்திலோ என்றால் அவருக்கு நிகரானவர் இல்லை; ஆயி னும் சிறு வயசிலே அவர் தீயவர்களோடு கூடிக் குடிவகை குடிக்கப் பழகிவிட்டார்.

அவரிடத்திலே படித்த மாணாக்கருள் ஒருவன் சிறந்த விவேகி; அவன் இந்த உபாத்தியாயருடைய கல்வியையும் விவே கத்தையுங் கண்டு வியந்து அவரிலே மிகுந்த பற்று வைத்தான்; அவரே தன் னுடைய குருவென்று எண்ணி, கடவுளுக் குச் சமானமாக மதித்தான். அவரும் அவனுடைய விவேகத்தையும் அன்பையுங் கண்டு தம்முடைய சொந்தப் பிள்ளைபோல அவனை நடத்திவந்தார்.



அவன் அடிக்கடி உபாத்தியாய ருடைய வீட்டுக்குப் போகிறவன். ஒரு நாள் அவருடைய வீட்டுக்குப் போனபொழுது அவர் 'உவிஸ்கி' என்று சொல்லப்படுகிற ஒரு குடிவகை குடித்துக்கொண்டிருந்தார். அவன் அதைக்கண்டு தனக்குஞ் சொற்ப உவிஸ்கி தரும்படி கேட்டான். அப்போது அவர்களுக் கிடையில் பின்வரும் பேச்சு நடந்தது:—

உபாத்தியாயர்: மகனே, உலகத்திலே யுள்ள கேடான பொருள்களுள்ளே குடி வகையைப்போலக் கேடானது வேறொன்று மில்லை; நீ என்னிலே மிகுந்த பற்றுள்ளவ னென்றால், நீ எனக்கு ஓர் உபகாரஞ் செய் தல் வேண்டும்; நீ இறக்கும் வரையும் குடி வகைகளுள் ஒன்றையும் தொடக்கூடாது.

மாணாக்கன்: ஐயா, பெரியோர்கள் தங்களிலே குற்றஞ் சொல்லுதல் வழக்கம். ஆயினும், அவர்கள் ஒருகாலமும் பிழையான செய்கை செய்யமாட்டார்கள். உங்களைப்போன்ற ஒரு பெரிய மனுஷன் உலகத்திலே இல்லை. நீங்கள் குடிவகை உபயோகிக்கின்றீர்கள். ஆதலாற் குடித்தல் பிழையானதென்று நான் ஒருகாலமும் எண்ணமாட்டேன்.

உபாத்தியாயர்: அப்பனே, நான் சொல்லுவதை நன்றாகக் கேள். நான் இந்தத் தீய பழக்கத்தைத் தெரியாமற் பழகிவிட்டேன். இதனல் வருகின்ற தீமைகளை யெல்லாம் நான் என்னுடைய அநுபவத்திலே கண்டிருக்கிறேன். அநேக சிறந்த வைத்தியர்கள் குடிவகைக ளெல்லாம் நஞ்சு என்று சொல்லுகிருர்கள்; நீ ஒரு நல்ல விவேகி; நற்குணங்கள் நிறைந்த பிள்ளை; நீ கெட்டுப் போகக் கூடாது; ஆனபடியாற்ருன் குடிவகையை நீ ஒருகாலமுந் தொடக்கூடா தென்று நான் உன்னைக் கேட்கிறேன். குடி வகையின் பொல்லாங்குகளை நான் அறிந்த பின்பு, இந்தத் தீயபழக்கத்தை விட்டுவிட அதிகம் முயற்சி செய்தேன்; எனக்கு வயசு போய்விட்டபடியால், நெடுங் கால மாகப் பழகிய இந்தப் பழக்கத்தை விட்டுக்கொள்ள முடியாமல் நான் கஷ்டப் படுகிறேன்.

மாணக்கன்: குடிவகைகள் சில வியாதி களுக்கு மருந்தாகக் கொடுக்கப்படுகின்றன; 'விறண்டியிலே' 'குவினி'னைச் சேர்த்துக் குடித்தாற் காய்ச்சல் மாறுமென்று சிலர் சொல்லுகிருர்கள்.



உபாத்தியாயர்: வைத்தியம் நன்ருகத் தெரியாத காலத்திலே படித்த வைத்தி யருட் சிலர் மாத்திரம் குடிவகைகளை மருந்தோடு சேர்த்துக் கொடுத்திருக் கிருர்கள். 'விறண்டி' தனியே காய்ச்சலை மாற்றினது கேள்விப்பட்டிருக்கின்ருயா?

மாணக்கன்: நான் கேள்விப்படவில்லை.

உபாத்தியாயர்: ஆதலால், காய்ச்சலை மாற்றுவது விறண்டியன்று என்பது தெரிகிறது. காய்ச்சலை மாற்றுவது குவினின்; விறண்டி காய்ச்சலை அதிகப் படுத்தும்; விறண்டியோடு சேராமற் 'குவினின்' கொடுக்கப்பட்டாற் காய்ச்சல் விரைவாக நீங்கும்.

---

## உரு. ஓர் உபாத்தியாயர் II

மாணக்கன்: குடிவகைகள் உணவை நன்ருகச் செமிப்பிக்கும் என்று சிலர் சொல்லுகிருர்கள்.

உபாத்தியாயர்: குடிவகைகள் இரைப் பையைப் புண்படுத்துவன என்று சிறந்த வைத்தியர்கள் சொல்லுகிருர்கள்; அவை உணவிலே மன மில்லாமற் செய்து உடம்பு மெலிய வருத்துவதை நீ காண

வில்லையா? எத்தனை மூடர்கள் பிள்ளை பெற்ற பெண்களுக்கு அந்த நேரத்திலே குடிவகைகளை வாங்கிக் கொடுக்கிறார்கள். அதனாலே அவர்களுடைய குடலும் கருப்பையும் புண்ணாக, எத்தனையோ வியாதிகள் அவர்களுக்கு உண்டாகின்றன.

மாணாக்கன்: குடிக்கிறவர்கள் மிகவும் பெலசாலிகளாய் இருக்கிறார்களே, அதற்குக் காரணமென்ன?

உபாத்தியாயர்: அவர்கள் இயல்பிலே பெலசாலிகள்; பெலத்தைக் கெடுப்பதாகிய குடிவகையைப் பருகினாலும், இயல்பாயுள்ள பெலன் விரைவிற் குறைகிறதில்லை; ஆயினும், கடைசியில் அது அவர்களை மெலியப்பண்ணி வியாதிக்காரராக்கியே விடும். தசையை வளர்க்கும் பொருள்களுக்கு வாயுசப்பொருள் என்று பெயர்; வாயுசம் குடிவகைக ளொன்றிலு மில்லை; அவைகள் தசையை வளர்ப்பதெப்படி? மெலிந்த உடம்புள்ளவர்கள் குடித்துப் பெலசாலிகளானதை நீ கண்டிருக்கிறாயா?

மாணாக்கன்; நான் காணவில்லை; குடிவகைகளை உபயோகித்தாற் களையாமல் வேலை செய்யலாமென்று சொல்லுகிறார்கள்.



உபாத்தியாயர்: குடிவகை புத்தியைக் கெடுப்பதினாலே, களை வந்தாலும் அது தோற்றாது. களைத்திருக்கிறபோது வேலை செய்தால் உடம்பு விரைவிற் கெட்டுப் போம்; ஆதலாற் குடிவகையினாற் களையை மறைத்தல் உடம்புக்குப் பெருந் தீமை. இதை அறிந்துதான் யுத்தம் நடக்கிற காலங்களிலே, அரசாட்சியார் ஊரிலே குடிவகைகள் பருகக்கூடாதென்று கட்டளை பண்ணுகிறார்கள். குடிக்கும் போர்வீரர் விரைவிற் களைத்துப் போவார்கள்; அப்படிக் களைத்தால் தோல்வி யடைவார்கள்; குடிக்கிறவர்கள் நெடுநேரம் வேலை செய்யமாட்டார்கள். ஆதலால் போர்க்களத்துக்கு வேண்டிய வாள், துவக்கு, பீரங்கி, வெடிமருந்து முதலியவற்றைச் செய்யும் வேலைக்காரர் குடித்தால் நன்றாக வேலை செய்யமாட்டார்கள். அதனாலே போர்க்களத்துக்கு வேண்டிய கருவிகள் போதியளவு செய்யப்படமாட்டா; போதிய அளவு இல்லாவிட்டாற் போர்வீரர் தோற்றுப் போவார்கள். இந்தக் காரணங்களாலே அரசாட்சியார் போர்க்காலத்திலே ஒருவரும் குடிவகை உபயோகிக்கக் கூடாதென்று கட்டளை யிடுகிறார்கள். குடிவகை உடம்பைக் கெடுப்பதற்கும் வேலையைக்

குறைப்பதற்கும் இதுநல்ல சாட்சியல்லவா? ஊரிலே மிகச்சிறந்த வைத்தியர்களும் மந்திரிமாரும் அரசாட்சியாருக்குச் சொன்ன படியாலல்லவோ, அரசாட்சியார் இப்படிச் செய்கிறார்கள்;

மாணாக்கன்: எத்தனையோ வைத்தியர்கள் குடிக்கிறார்களே; அது உடம்புக்குக் கூடாதென்றால் ஏன் அவர்கள் குடிக்கிறார்கள்?

உபாத்தியாயர்: உலகத்திலே பிழை செய்கிறவர்கள் பெரும்பாலும் தாங்கள் செய்வது பிழையென்று நன்றாக அறிந்து தான் செய்கிறார்கள். பொய் சொல்லுவது குற்றமென்பது பொய்யனுக்குத் தெரியும். சூதாடுவது குற்றமென்பதைச் சூதாடுபவன் அறிவான். அப்படியே குடிவகை பருகும் வைத்தியனுக்குக் குடிவகை தீயதென்பது நன்றாகத் தெரியும்; தீய பழக்கங்களிலே மனிதருக்கு ஒரு விருப்பமுண்டு. தீய பழக்கம் பழகினால் அதை விடுவது பிரயாசம்; ஆதலினாற்றான் அநேகர் தாங்கள் செய்வது குற்றமென்று அறிந்தும் குற்றத்தைச் செய்கிறார்கள்: குடிவகை உடம்புக்குமாத்திரம் நட்டமானதா? அது மூளையைப் பழுதாக்கி, எல்லாவிதமான



துஷ்டச் செய்கைகளுக்கும் ஏவிவிடும். ஆதலாற் குடிவகையைப் போலத் தீய பொருள் வேறொன்றுமில்லை. குடிவகையில் ஒவ்வொரு துளியும் நஞ்சு. இதை நன்றாக உணர்ந்துகொள்.

மாணாக்கன்: ஐயா: நீங்கள் என்ன நியாயத்தைச் சொன்னாலும் எதையும் என் மனம் ஏற்றுக்கொள்ளமாட்டாது. நீங்கள் என்னுடைய குரு; நான் உங்களைக் கடவுளுக்குச் சமமாக எண்ணியிருக்கிறேன். ஆனதினால், நீங்கள் செய்கிற செய்கை குற்றமான செய்கையென்று நான் ஒருகாலமும் எண்ணமாட்டேன். நான் குடிவகை உபயோகிக்கவே போகிறேன்; இது நிச்சயம்.

உபாத்தியாயர்: ஐயையோ! நான் மண்ணானது போதாமல் அருமந்த பிள்ளையாகிய உன்னையும் மண்ணாக்கவோ? இன்றைக்கே நான் இந்தக் குடிக்கிற பழக்கத்தை விட்டுவிடுகிறேன்.

மாணாக்கன்: நீங்கள் குடிக்கிறதை விட்டால், நான் ஏன் குடிக்கப்போகிறேன்?

அன்றைக்கே உபாத்தியாயர் குடியை விட்டார். அதன்பின் அவர் தம்முடைய

காலத்தை மிகவும் பிரயோசனமாகக் கழித்து அநேக அரிய நூல்களைச் செய்தார்.

---

## உக. புயபலராசன் I

இந்தியாவிலே வங்காளம் என்னும் ஒரு நாடு உண்டு. அந்த நாட்டை முற் காலத்திலே புயபலன் என்னும் ஓர் அரசன் நீதி தவறாது ஆண்டுவந்தான். அவனுடைய மனைவியின் பெயர் புதுப் பூங்கோதை; அவள் அதிக அழகும் நல்ல குணமும் உடையவள்.

புயபலராசன் ஒருமுறை ஒரு புண்ணிய காலத்திலே பிராமணர்களுக்குப் பொன் பசு முதலியனவற்றைத் தானஞ்செய்ய விரும்பி அவர்களைத் தன்னுடைய மாளிகைக்கு அழைத்தான். அப்பொழுது விதர்ப்ப நாட்டில் இருக்கும் சுசீலர் என்னும் ஒரு சிவபத்தியிற் சிறந்த பிராமணரும் அங்கே சென்றார். புயபலன் அவருக்கு வேண்டிய மரியாதை செய்து அதிக திரவியத்தைத் தானமாக ஏற்கும்படி இருகரங்களாலும் நீட்டினான். சுசீலர் தானத்தை ஏற்கப் போகும்போது, அரசனுடைய நெற்றியில் விபூதி இல்லாமையைக்கண்டு, விபூதி பூசிக்கொண்டு தானத்தைத் தரும்படி



அரசனுக்குச் சொல்லி, அதனை அப்பொழுது வாங்க மறுத்தார். அரசன் கோபித்து, "விபூதி பூசாமல் தானஞ் செய்தால் என்ன தீமை உண்டாகும்?" என்று கேட்டான். அந்தப் பிராமணர், "அரசனே, விபூதி எல்லாவிதமான பாவங்களையும் நீக்கும்; சிவபெருமானிடத்தில் அன்பில்லாதவரும் விபூதி தரித்தால் நரகத் துன்பத்தை அடையமாட்டார்கள்; நெற்றியிலே திருநீறு இல்லாமல் எந்தக் கருமமுஞ் செய்தல் ஆகாது; திருநீறு பூசாதவர்கள் கொடுக்குந் தானத்தை நாம் வாங்கமாட்டோம்; ஆகையால் திருநீறு பூசியபின் தானஞ்செய்" என்றார்.

அதற்கு அரசன் "ஐயரே, நான் விபூதி பூசுவதில்லை: உமக்குப் பிரியமானால் நான் தரும் தானத்தை வாங்கிக் கொள்ளும்; இல்லையேற் போம்" என்று அதிகக் கோபத்துடன் சொன்னான். சுசீலர், புயபலனைப் பார்த்து, "அரசனே, நெற்றியில் விபூதி பூசாமல் நீ தரும் தானத்தை நான் ஒருபோதும் ஏற்கமாட்டேன்; நீ விபூதி தரிக்க மறுத்தாய்; இதனால் நீ இராச்சியம் இழந்து, மனைவி மக்களைப் பிரிந்து, நோயாளியாகி ஊர் முழுவதுஞ் சோற்றுக்கு அலைந்து திரிவாய்; இது

உண்மை" என்று சொல்லி அவ்விடத்தை விட்டு எழுந்து போனார்.

சுசிலர் போகும்போது, அங்கிருந்த அரசனது தேவியாகிய புதுப்பூங்கோதை, தன் மூக்குத் துவாரத்துள் ஒரு துரும்பைப் புகுத்தித் தும்மி, "ஐயரே, தும்மலால் தடையுண்டாகிறது. ஆகையால் தானத்தை ஏற்றுக்கொண்டு போம்" என்று பரிகாசஞ் செய்தாள். ஐயர் ஒன்றுஞ் சொல்லாமல் தம் ஊருக்குப் போனார்.

சிலகாலஞ் சென்றபின் புயபலராசனுடைய சேனைகள் எல்லாம் மாண்டன. அவனும் நோயாளியானான். வேறு தேசத்து அரசர்கள் அவனுடைய நாட்டைப் பிடித்தனர். புயபலன் பகைவருக்குப் பயந்து தன் மனைவியுடன் காட்டிலே போய் ஒளித்து இருந்தான். ஒருநாள் உண்பதற்குஉணவில்லாமையால், அரசனும் மனைவியும் பசிபொறுக்க முடியாமல் அழுது கொண்டு இருந்தார்கள். அப்பொழுது அந்த வழியால் வந்த ஒரு வேடன் புதுப்பூங்கோதையைக் கண்டு அவளை வலாற்காரமாய் இழுத்துக் கொண்டு போயினான். நோயாளியாய் இருந்தமையால், வேடன் கையிலிருந்து தன் மனைவியை



விடுவித்தற்கு அரசனால் முடியவில்லை. வேடன் கையில் அகப்பட்ட புதுப்பூங்கோதை கதறிக்கொண்டு போகும் போது, அந்தக் காட்டிலே இருந்த ஒரு புலி வேடனைப் பிடித்துக் கொன்றுதின்றது. புதுப்பூங்கோதை கற்பு உடையவள் ஆதலினாலே புலி வேடனைக் கொன்று அவளைக் கொல்லாமல் விட்டது.

புயபலன் அக்காட்டை விட்டு மெல்ல மெல்ல நடந்து விதர்ப்ப தேசத்தை அடைந்து, அங்கே வீடுகள் தோறும் பிச்சைஎடுத்து வயிறு வளர்த்து வந்தான். அவன் ஓர் இரவு பசி பொறுக்கமாட்டாதவனாய் ஒரு வீட்டுட் புகுந்து உணவு திருடும்போது, அவ்வீட்டுக்காரர் கள்வன் என எண்ணி அவனைப் பிடித்து நகர் காவலரிடங் கொடுக்க, அவர்கள் அவனை அந்த நாட்டை ஆளும் அரசனிடம் ஒப்புவித்தார்கள். அரசன் அவனுடைய ஒரு காலையும் ஒரு கையையும் வெட்டும்படி கட்டளை செய்தான். ஏவலாளர் புயபலனைக் காட்டிற் கொண்டுபோய் அவனுடைய ஒரு காலையும் கையையும் வெட்டிவிட்டார்கள். அவன் துன்பம் பொறுக்க முடியாமல் அழுதுகொண்டு சில நாட்களாக அந்த

இடத்திலேயே கிடந்தான். பின்பு ஒருவாறு காயம் மாறப்பெற்றுப் புயபலன் பிச்சை எடுத்து உண்ணப் புறப்பட்டான்.

---

## உஎ. புயபலராசன் II

புயபலனுடைய செய்தி இவ்வளவில் நிற்க, வேடன் கையிலிருந்து தப்பிய புதுப் பூங்கோதையும் விதர்ப்பநாட்டை அடைந்து அங்குள்ள வீடுதோறும் பிச்சை எடுத்து உண்டு திரிந்தாள். ஒருதினம் அவள் பசிக் கொடுமையினால் ஒரு வீட்டிலே உணவைத் திருடி உண்டபோது கள்ளி என்று பிடித்து அரசனுடைய கட்டளைப்படி கையும் மூக்கும் அறுக்கப்பட்டாள்.

புயபலன் ஒருதினம் ஓர் அந்தணன் வீட்டிற்குப் போய், "அம்மா, பசிபொறுக்க முடியவில்லை. கொஞ்சஞ் சாதங்கொடுங்கள்" என்று கேட்டான். அப்பொழுது அந்த வீட்டில் ஓர் ஐயர் அவனை உற்றுப்பார்த்து "நீ யார்?" என்று வினவினார். புயபலன் தான் ஆர் என்பதைச் சொல்லாமற் சும்மா நின்றான். ஐயர் "நீ வங்கநாட்டு வேந்தனாகிய புயபலன் அல்லவா" என்றுகேட்டார். புயபலன் திடுக்குற்று "ஆம்" என்றான்.



ஐயர் "விபூதி பூசிக்கொண்டு தானஞ் செய்யவேண்டும் என்று நான் உனக்கு முன்னே சொல்லியபொழுது, நீ விபூதியை இகழ்ந்து என்னையும் அவமதித்தாய் அல்லவா? அந்தப் பாவத்தினாலேயே இப்பொழுது இக்கோலமானாய்" என்றார். புயபலன் ஐயர் சொல்லிய வார்த்தையைக் கேட்டுச் சரீரம் நடுங்கி, அந்த ஐயர் சுசீலர் என்பதை அறிந்து, அவர் பாதங்களில் வீழ்ந்து தான் செய்த குற்றத்தைப் பொறுக்கும்படி சொல்லி அழுதான். சுசீலர் அவன்மீது கருணைகொண்டு அவனுக்கு விபூதி கொடுக்க, அவன் அதை ஏற்று அன்புடன் பூசினான். பூசிய உடனே புயபலன் வெட்டுண்ட கால் கைகள் பழையபடி கூடப்பெற்று மிக்க அழகுடன் காணப்பட்டான்.

இப்படி யிருக்குஞ் சமயத்திற் புதுப் பூங்கோதையும் யாசிக்கும்படி அந்த ஐயர் வீட்டிற்குப் போனாள். அங்கே தன் நாயகன் நிற்கக் கண்டு அவள் அவனுடைய கால்களில் வீழ்ந்து அழுதாள். புயபலனுக்கு அவள் தன் மனைவி என்பது தெரியவில்லை. அவன் "பெண்ணே, நீ யார்?" என்று கேட்டான். "நான் உமது மனைவி புதுப்

பூங்கோதை, உம்மைப் பிரிந்த பின்பு இக் கோலமானேன்" என்றாள். அவளுக்கும் சிறிது விபூதி கொடுக்கும்படி புயபலன் சுசீலரை இரந்தான். சுசீலர் விபூதி கொடுக்க அவள் அதனை வாங்கி அன்புடன் பூசியபின், வெட்டுண்ட கையும் மூக்கும் கூடப்பெற்று முன்போல் அழகுள்ளவளானாள். சுசீலரைப் பரிகாசஞ் செய்தமையாலே புதுப்பூங்கோதை அப் படிப்பட்ட துன்பங்களை அனுபவித்தாள்.

புயபலராசனுடைய செய்தியைக் கேள்வியுற்று விதர்ப்பநாட்டு அரசனும் சுசீலர் வீட்டிற்குப் போய் அச் சுசீலரை வணங்கினான் விதர்ப்பநாட்டு வேந்தன் புயபலனுக்கு மைத்துனன் முறை பூண்டவன். அவன் புயபலனையும் தேவியையும் தன்னுடைய மாளிகைக்கு அழைத்துக்கொண்டு போய் உபசரித்தான். சில நாட்கள் சென்றபின்பு புயபலன் விதர்ப்பநாட்டு அரசனுடைய சைனியத்தின் துணையைக்கொண்டு பகைவரை வென்று தன்னுடையநாட்டைப் பெற்று அரசாண்டு இனிது வாழ்ந்தான்

---



## ௨௮. குருவும் சீஷனும் I

குரு: இராமசுவாமி, எங்கே போகிறீர்?

சீஷன்: சுவாமி, நமஸ்காரம், நாளைக்கு எங்கள் வைரவர் கோயிலிலே ஓர் ஆடு பலிவெட்ட வேண்டும். அதற்காக ஓர் ஆடு விலைக்கு வாங்கப் போகிறேன்.

கு: ஐயையோ! என்னபாதகம்! பஞ்சமா பாதகங்களிலே மிகக் கொடிய பாதகங் கொலையல்லவா? உலகத்திலேயுள்ள ஒவ்வொரு பிராணியையும் உண்டாக்கினவர் யார்?

சீ: கடவுள்தான் எல்லாப் பிராணியையும் உண்டாக்கினார்.

கு: அப்படி யென்றால், கடவுள் எல்லாப் பிராணிகளுக்கும் பிதாவாக இருக்கிறாரல்லவா? உம்முடைய பிள்ளையை யாராவது வெட்டிக் கொல்லுவது உமக்குப் பிரியமா யிருக்குமா?

சீ: என்னுடைய பிள்ளையின் மேலே ஒருவன் தொட்டாலும் நான் பொறுப்பேனா? என்னுடைய பிள்ளையை ஒருவன் கொல்லுவதென்றால், எப்படிப் பொறுப்பேன்?

கு; உம்முடைய பிள்ளை மேலே மற்றையவர்கள் தொடுகிறதும் உமக்குப் பிரிய மில்லாவிட்டால், கடவுளுடைய பிள்ளைகளாகிய ஆடு கோழிகள் முதலிய வற்றை நீங்கள் கொல்லுவது கடவுளுக்கு விருப்பமா யிருக்குமா? கடவுளாலே உங்களுக்கு அளவில்லாத தண்டனை வந்து சேருமே. நீங்கள் உங்கள் வீடுகளிலே தானும் அவைகளைக் கொல்லுவது பெரும் பாதகம். அப்படி யிருக்க, ஒரு கோயிலிலே கடவுள் முன்னிலையிலே அவைகளை வெட்டுவது எவ்வளவு பெரும்பாதகம்! ஒருவன் உன் வீட்டுக்கு வந்து உனக்கு முன்பாக உன் பிள்ளையை வெட்டுவானானால் உனக்கு என்னவிதமாய் இருக்குமோ, அப்படியேதான் கோயிலிலே சுவாமி யுடைய முன்னிலையில் ஆட்டை வெட்டு கிறதும் சுவாமிக்கு வெறுப்பாக இருக்கும். கோயிலிலே ஆடுகள் கோழிகள் வெட்டு வதைப்போலப் பாதகம் வேறொன்றுமில்லை.

சீ: இது இவ்வளவு பெரும்பாதகமாய் இருந்தால், நாங்கள் ஆடுகளை வெட்டுகிற போது கடவுள் எங்களுக்கு ஒரு பொல் லாங்கும் வரப்பண்ணாமல் இருப்பதற்குக் காரணமென்ன?



கு: உலகத்திலே எத்தனை மனிதர் வேறெத்தனை பொல்லாங்குகளைச் செய் கிறார்கள்? அவர்களுக்கெல்லாம் கடவுள் உடனே தண்டனை செய்கின்றாரா? இல்லையே; இந்தப் பிறவியிலே தண்டனை கிடையாவிட்டால், அடுத்த பிறவிகளி லாவது நிச்சயமாகக் கிடைக்குமல்லவா? நரகத்திலே கிடந்து பலகாலம் வருந்து வார்கள்; இந்த உலகத்திலே வரக்கூடிய தண்டனைகள் உங்களுக்குப் போதியன வல்ல. நல்லவர்களைக் கடவுள் உடனே தண்டிப் பாராம்; மற்றையவர்களைத் தாமதித்துத் தண்டிப்பாராம். "அரசன் அன்றொறுக்கும், தெய்வம் நின்றொறுக்கும்" என்ற பழமொழி உமக்குத் தெரியாதா?

சீ: நாங்கள் துட்ட தெய்வங்களுக்குத் தானே ஆடு, கோழி வெட்டுகிறோம்; சிவபெருமானுக்கு முன்னே அப்படிச் செய்கிறோமா?

கு: உம்முடைய மறுமொழியில் மூன்று பிழைகள் இருக்கின்றன; முதலாவது குளிர்மையான நெருப்பு எங்கேயாவது கண்டீரா? துட்ட தெய்வமென்று சொல்வது குளிர்ந்த நெருப்பு என்று சொல்வதுபோ லிருக்கிறது; தெய்வமென்றது எங்களுக்கு

மேற்பட்டது; எங்களிலும் உயர்ந்த தன்மையுள்ளது. ஆதலினால் தெய்வம் துட்டத்தனமா யிருக்கமாட்டாது; துட்ட தெய்வமென்று ஒன்றில்லை; தெய்வங்களெல்லாம் நல்ல தெய்வங்கள்தாம். இரண்டாவது, வைரவக் கடவுள் சிவபெருமானுடைய திருக்குமார ரென்று நூல்கள் சொல்லுகின்றன. திருக்குமார ரென்றது அவருடைய சத்தியை; அவரும் அவருடைய சததியும் வேறல்ல. ஆதலால் வைரவக் கடவுளும் சிவபெருமானும் ஒன்றேயாம். வைரவக்கடவுள் பிரமாவினுடைய தலையைக் கிள்ளினாரென்று புராணங்கள் சொல்லுகின்றன; திருநாவுக்கரசுசுவாமி சிவபெருமானை நோக்கி, "பிரமன்றன் சிரமரிந்த பெரியோய் போற்றி" என்று தேவாரத்திலே பாடுகின்றார்; ஆதலால் வைரவக் கடவுளும் சிவபெருமானும் ஒன்றேயாம். மூன்றாவது, எந்தத் தெய்வத்தின் முன்னிலையிலும் ஆட்டை வெட்டுவது பாவந்தானே.

---

## உக குருவும் சீஷனும் II

சீஷன்: நாங்கள் ஆடு வெட்டுவது வைரவருக்காகவல்ல; வைரவருடைய கலைகளுக்காக.



குரு: கலைக ளென்றால் என்னவோ?

சீ: கலைக ளென்றது அவருடைய வேலைக்காரர். நாங்கள் மாமிசம் புசியாவிட்டாலும் எங்களுக்கு வேலை செய்கிறவர்கள் மாமிசம் புசிப்பதில்லையா? அப்படித்தான் வைரவருடைய கலைகளும் ஆடு கோழிகளை உண்ணுகின்றன.

கு: எங்களுக்கு உணவுக்கு நெல்லு வேண்டும்; அதற்காக வயற் செய்கை பண்ணுகின்றோம்; அந்த வேலைக்கு உதவியாகக் கூலியாளரைப் பிடிக்கின்றோம். வைரவ சுவாமிக்கு எங்களைப்போலப் பசியுண்டா? அவருக்கு உணவு வேண்டுமா? அவருக்கு எத்தனை பரப்பு வயலிருக்கிறது? அவருக்குக் கூலியாளரேன்? கலைகளேன்? அவருக்குத் தேவையானது என்ன இருக்கிறது? அவர்பரிபூரணரல்லவா? அன்றியும், நாங்கள் தனியே ஒரு வேலை செய்ய மாட்டாமல் இருக்கிறபடியால் வேலைக்காரரை வைத்திருக்கிறோம். அவர் செய்ய மாட்டாதது ஏதும் இருக்கிறதா? அவர் சர்வ வல்லமை யுள்ளவரல்லவா?

சீ: எங்களுக்கு இவை யெல்லாந் தெரியுமா? நீங்கள் இப்படிச் சொல்லித் தந்தாலல்லவோ எங்களுக்குத் தெரியும்;

ஆனாலும் நெடுங்காலம் இந்த வழக்கம் இருக்கிறதே. அது எதனாலே?

கு: பழைய சரித்திரமெல்லாம் நமக்கு ஏன்? யாராவது அறிவாளிகள் ஆடு, கோழி நேர்ந்து விட்டதையாவது, வெட்டினதையாவது அறிந்திருக்கிறீரா? மூடச் சனங்களுடைய செய்கைக்கு நியாயமேது? இது பிழையான செய்கை யென்றது உமக்குத் தெரிகிறதா? இல்லையா?

சீ: அண்ணமார் காத்தவராயர் முதலிய தெய்வங்களுக்கும் ஆடு வெட்டக்கூடாதா?

கு: எந்தப் பிசாசுகளா யிருந்தாலும் கடவுள் படைத்த ஒரு பிராணியைக் கொல்லக்கூடாது. நீர் இலகுவாய் விளங்கக் கூடிய ஒரு நியாயஞ் சொல்லுகிறேன்; சில பறையர் செத்தமாட்டைத் தின்னுகிறார்கள்; அவர்கள் அமாவாசையிலே விரத மிருக்கிறார்கள். விரத நாளிலே அவர்கள் மற்ச மாமிசந் தின்பார்களா? மற்ச மாமிசம் சமைத்த சட்டியிலேதானுஞ் சமைக்கமாட்டார்களே; செத்த மாடு தின்னுகிறவனுக்கு மற்ச மாமிசம் பட்ட சட்டியே தள்ளுபடி யென்றால், உம்முடைய தெய்வத்திற்கு ஆட்டிறைச்சியும் கோழியிறைச்சியும் சம்மதமா யிருக்குமா?



சீ: சுவாமிகள் சொல்லுகிற வெல்லாஞ் சரி. ஆயினும் ஒருவன் ஒரு வியாதியால் வருந்துகிற பொழுது 'வைரவருக்கு ஆடு வெட்டுவேன்' என்று நேர்ந்தால், அந்த வியாதி மாறுகிறதற்குக் காரண மென்ன? என்னுடைய மகன் சென்ற சித்திரை மாதம் கடுவருத்தமா யிருந்தான்; கணுக்கேணியில் வைரவருக்கு ஓர் ஆடு வெட்டுவேன் என்று நேர்ந்தேன்; வருத்தஞ் சுகமாய் விட்டது. காரணமென்ன?

கு: வைரவருக்கு ஆடு வெட்டுவேனென்று நேர்ந்ததினாலே, நாலு நாளைக்கு முந்தி மாறுகிற வியாதி நாலுநாட் பிந்தி மாறும். அதுதான் நீ கண்ட பலன். இங்கிலாந்திலே முற்காலத்தில், கையிலே கத்தி வெட்டினால் வெட்டின கத்திக்கு மருந்து போடுவார்களே யல்லாமல், வெட்டுக் காயத்திற்கு மருந்து போடார்களாம். அந்த மருந்தை வெட்டுக் காயத்துக்குப் போட்டால் நாலுநாள் முந்தியே மாறுகிற காயம் பிந்தி மாறுமாம். ஏனென்றால் அவர்களுடைய அந்தக்காலத்து மருந்து காயத்தைப் பெருப்பிப்ப தல்லாமல் காயத்தை மாற்றுவதல்ல. அப்படியே, ஒருவருக்கு வருத்தம் வந்தால், அதற்காகத் தெய்வங்களுக்கு ஆடு கோழி நேருவது வியாதி

யைக் கூட்டுமல்லாமல் குறைக்காது. ஆடு வெட்டுவேன் என்று நினைப்பது தீமை. தீமை செய்தால், தீமைதான் வரும். அதாவது வியாதி அதிகப்படும்.

சீ: ஆடு கோழியைப் பலி செய்வது பிழையென்றால், நாங்கள் பலிசெய்ய வேண்டியது எதை?

கு: "பலி" என்ற சொல்லின் கருத்து கொடுக்கப்படுவது என்பது; நாங்கள் கடவுளுக்குக் கொடுக்க வேண்டியவைகள் நமது பொருள், உடல், ஆவி என்பனவாம். இந்த மூன்றையும் கடவுளுக்குப் பலி செய்து விட்டால், நமக்கு மோட்சங் கிடைக்கும்; நமக்குள்ள பொருள் எல்லாவற்றையும் புண்ணியமாகச் செலவு செய்ய வேண்டும். நம்முடைய உடலைக்கொண்டு கடவுளுக்குத் திருத்தொண்டு செய்ய வேண்டும். நம்முடைய மனத்தினாலே கடவுளை எப்போதும் நினைக்க வேண்டும். தாயுமான சுவாமிகள், "வைத்த பொருள் உடல் ஆவி மூன்றும், நின் கைவசமெனவே யான் கொடுக்க" என்றும், "துள்ளும் மறியாம் மனது பலி கொடுத்தேன்" (ஆடு போலத் துள்ளிக்கொண்டு திரிகின்ற மனத்தைப் பலிகொடுத்தேன்) என்றும் சொல்லுவதைக் காண்க.



சீ: சுவாமீ, பலியென்பதன் கருத்து எனக்கு இப்போது நன்றாக விளங்குகிறது. நான் இனி ஒரு காலமும் ஆடு வெட்ட மாட்டேன். அதற்குப் பதிலாக என்னுடைய மகனை ஒவ்வொரு நாளும் கோயிலுக்குப் போகப் பண்ணுவேன். நமஸ்காரம், நான் போய் வருகிறேன்.

கு: ஆசீர்வாதம்; போய்வாரும்.

---

## ௩௦. ஒரு வேளாளன்

கொங்க நாட்டிலே ஒரு முறை ஒரு யுத்தம் நடந்தது. அப்போது ஆயிரக் கணக்கான போர்வீரர்கள் பல இடங்களிலும் கூட்டங் கூட்டமாகத் தங்கியிருந்தார்கள். ஒரு குதிரைச் சேனாதிபதி ஒரு நாள் தன்னுடைய போர்வீரருக்கும் குதிரைகளுக்கும் போதிய உணவில்லை யென்று மகாசேனாதிபதிக்கு முறையிட்டான். மகா சேனாதிபதி சமீபத்தி லிருக்கும் வயல்களுக்குப் போய்ப் போதிய அளவு தானியம் அரிந்து வரும்படி அவனுக்குக் கட்டளையிட்டார்.

அப்படியே குதிரைச் சேனாதிபதி சில போர்வீரரோடு ஒரு வயல் வெளியை

நோக்கிப் போனான். போகிறவழியில் ஒரு வீடு இருந்தது. அவன் வீட்டுக் கதவிலே தட்டினான்; வீட்டுக்காரன் கதவைத் திறந்து வெளியே வந்தான். அவன் மிகவும் வயது போன கிழவன். அவனுடைய காலும் முடம்; ஓர் ஊன்றுகோலையும் பிடித்துக் கொண்டு, "நீர் யார்? இங்கு வந்த காரிய மென்ன?" என்று கேட்டான்.

சேனாதிபதி, "நான் ஒரு சேனைக்குத் தலைவன், என்னுடைய போர் வீரர்களுக்கு உணவு இல்லாதபடியால், அவர்களுக்குப் போதிய அளவு தானியம் வெட்டக்கூடிய ஒரு விளைந்த வயலை இவ்விடத்திலே நீ காட்டவேண்டும்" என்றான். கிழவன் இவர் களைக் கூட்டிக்கொண்டு முடவி முடவி நெடுந்தூரம் போனான். அதிலிருந்து சொற்பத் தூரத்திலே ஒரு செழிப்பான வயலிலுள்ள நெற்கதிர்கள் காற்றில் அசைவதைச் சேனாதிபதி கண்டான்; கண்டவுடனே, "இந்த வயலிலுள்ள தானியங்கள் எங்களுக்குப் போதும், இதையே வெட்டுவோம்" என்றான்.

கிழவன் "இதை வெட்டவேண்டாம்; என்னுடன் இன்னும் சிறிது தூரம் வாருங்கள்" என்றான்; அதற்கு அப்பால்,



இரண்டு மூன்று மைல்கள் போனபின் ஒரு வயலை யடைந்தார்கள். கிழவன் சேனாபதியைப் பார்த்து, "இதையே வெட்டுங்கள்" என்றான். உடனே போர் வீரர்கள் நெல்லை வெட்டிக் கட்டுக்களாகக் கட்டிக்கொண்டு புறப்பட்டார்கள்.

சேனாபதி கிழவனைப் பார்த்து, "நீர் ஏன் இவ்வளவு தூரம் எங்களை நடக்க வைத்தீர்? நாங்கள்தாம் அதிக தூரம் நடந்தாலும் குற்றமில்லை. நீர் வயது சென்ற மனிதர்; கால் நடக்கமாட்டாதவர்; நீர் இவ்வளவு தூரம் வரவேண்டிய அவசிய மில்லையே; முன் கண்ட வயலில் இதிலும் பார்க்க நேர்த்தியான தானிய மிருந்ததே! அதை வெட்டவேண்டா மென்று ஏன் சொன்னீர்?" என்றான். அதற்கு அந்தக் கிழவன் "நீ சொல்லுவது முழுவதுஞ் சரி; ஆனால், அந்த வயல் என்னுடைய தல்லவே" என்றான்.

---

## ௫௧. சீராளச் செட்டி.

ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னே மகாராட்டிர தேசத்திலே ஒரு பகுதியிலே ஒரு பெரிய பஞ்சம் உண்டானது. அந்தப் பஞ்சம் பன்னிரண்டு வருஷம் நிலைத்

திருந்தது; அந்தக் காலத்திலே இருப்புப் பாதையில்லை, சிறந்த தெருக்களுமில்லை, ஒரு நாட்டிலிருந்து வேறொரு நாட்டுக்குப் பொருள் பண்டங்கள் கொண்டுபோவது மிகப் பிரயாசமா யிருந்தது.

பஞ்சக்காலத்திலே பொருள் அருமையா யிருத்தலினாலே வியாபாரிகள் விலையை மிகவும் ஏற்றி விற்பது வழக்கம். வழக்க மாகப் பத்துரூபா விலையுள்ள ஒரு பொருள் பஞ்சக்காலத்திலே இருபது ரூபா முப்பது ரூபாவிற்கு விற்கப்படும்.

ஆயினும், இந்தப் பஞ்சமுண்டான காலத்திலே சீராளச் செட்டியார் என்ற வியாபாரி பண்டங்களை வழக்கமாய் விற்பதி லும் குறைந்த விலைக்கு விற்றார். அவர் அளவில்லாத பொதி எருதுகளைக் கொண்டு போய்ப் பிறவூர்களிலிருந்து மிகப் பிரயாசப் பட்டுச் சரக்குக்களை வாங்கிவந்து அந்தப் பன்னிரண்டு வருஷ காலமும் விற்று வந்தார்.

அந்த ஊரிலுள்ளவர்க ளெல்லாம் இதைக் கண்டு அதிசயப்பட்டார்கள். அவ் வளவு காலமும் விற்ற பொருள்களை விலை யேற்றி விற்றிருந்தால், அவருக்கு அள வில்லாத செல்வம் வந்துவிடும். ஆயினும்,



அவர் அப்படிச் செய்யவில்லை; விலையேற்றி விற்றால், வறியவர்கள் உணவுப்பொருள்களை வாங்க இயலாமற் பசியால் வருந்தி இறந்து போவார்கள். அவர் அவ்வளவு பிரயாசப் பட்டுப் பிறவிடங்களிலிருந்து பண்டங்களைக் கொண்டுவராமல் விட்டால், செல்வர்களாய் உள்ளவர்களும் உணவுப் பொருள்கள் அகப்படாமல் இறந்து போவார்கள்.

இப்படியே அவர் அந்த ஊர்ச் சனங்க ளெல்லாரையுங் காப்பாற்றினர். தாம் பெரிய செல்வராக வரவேண்டும் என்ற எண்ணம் அவருக்குச் சற்றேனும் இருக்கவில்லை. இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளுங் கழிந்த பின்பு, மழை காலந் தவருமற் பெய்ய, வயல்கள் நன்ருய் விளைந்தன; பஞ்சம் நீங்கியது.

அந்தக் காலத்திலே அந்த ஊரை ஆண்ட வாதரன் என்னும் அரசன் சீராளச் செட்டியாருடைய பெருந்தன்மையையும் புண்ணியமான செய்கையையுங் கேள்விப் பட்டுச் சந்தோஷ மடைந்தான். ஒரு நாள் அவன் அவரைத் தம்முடைய சபையில் அழைத்து மிகுந்த மரியாதைக ளெல்லாஞ் செய்து, “மகாப் பிரபுவே, நீர் என் னுடைய சனங்களுக்கு அளவில்லா நன்மை

செய்திருக்கின்றீர். அதற்காக என்னுடைய சனங்களும் நானும் உமக்கு மிகவுங் கடமைப் பட்டிருக்கிறோம். நீர் இப்போது என்ன கேட்டாலும் அதைத் தருகிறதற்கு நான் சித்தமா யிருக்கிறேன்; ஆதலால் உமக்கு எது பிரியமோ அதைக் கேளும்" என்றான்.

செட்டியார் அந்த இராச்சியத்தைத் தம்மிடத்திலே நாற்பத்தெட்டு மணி நேரம் தரும்படி கேட்டார். அதைக் கேட்டதும் அரசன் திடுக்கிட்டான். இருந்தாலும், வாக்கை நிறைவேற்றுவதற்காக அரசன் அவருடைய கையிற் செங்கோலைக் கொடுத்துச் சிங்காசனத்தில் ஏற்றி வைத்தான். இராச சபையிலே இருந்தவர்க ளெல்லாரும் ஆச்சரியப்பட்டு, செட்டியார் இராசாவாகி என்ன செய்யப்போகிறார் என்று ஒருவரோடு ஒருவர் ஆலோசித்தனர்; சிலர் "இவன் தன்னுடைய இனத்தவர்களுக்கு உயர்ந்த உத்தியோகங்களெல்லாம் கொடுக்கப்போகிறான்போலும்" என்றும், வேறு சிலர், "இவன் இந்த இராச்சியத்திலேயுள்ள ஒரு நாட்டைத் தனக்குச் சொந்தமாக்கப் போகிறான் போலும்" என்றுஞ் சொன்னார்கள். இப்படியே பலரும் பலவிதமாகப் பேசினார்கள்.



அந்த இராச்சியத்திலே கோயில்கள், பள்ளிக்கூடங்கள், வைத்தியசாலைகள் முதலிய தருமங்களுக்கு, முன்னிருந்த அரசர்களாற் கொடுக்கப்பட்ட நிலங்கள் அதிகமாய் இருந்தன. அவைகள் எல்லாவற்றையும், வாதரன் பட்டத்துக்கு வந்தபொழுது, தனக்குச் சொந்தமாக்கிவிட்டான்; அதனாலே மேலே சொல்லப்பட்ட தருமங்களுக்குக் குறைவு நேர்ந்தது. இதைச் சீராளச்செட்டியார் கண்டு மனவருத்தப் பட்டுக்கொண்டிருந்தவர்; இவருக்கு அதிகாரங்கிடைத்ததும, அந்த நிலங்க ளெல்லாவற்றையும் அந்த அந்தத் தருமங்களுக்குத் திருப்பிக் கொடுத்தார். அந்த வேலை முடிந்தவுடனே, இராச்சியத்தை வாதரனிடம் திருப்பிக் கொடுத்துவிட்டுத் தம் வீட்டுக்குப் போனார். அரசன் செட்டியாரின் பெருந்தன்மையை வியந்து, அவர் "வேண்டாம் வேண்டாம்" என்னவும், அவருக்கு ஒரு நாட்டைச் சொந்தமாகக் கொடுத்தான். இன்றைக்கும் அந்த ஊரிலே சீராளச் செட்டியாருடைய பேரால் வருஷத்துக் கொருமுறை ஒரு பெரிய பூசை நடக்கிறது.

———

## ௩௨. இரந்திதேவர்

இரந்திதேவர் என்னும் இராசா ஒருவர் இருந்தார். அவரும் அவருடைய பரிவாரங்களும் ஒருமுறை காட்டுக்குப் போய் நாற்பத்தெட்டு நாள் விரத மிருந்தார்கள். நாற்பத்தொன்பதாம் நாட் காலையில் அவர்களுக்கு உணவின் பொருட்டு நெய்யும், பாலும், கோதுமை மாவும், தண்ணீரும் வந்தன.

அவர்கள் உணவருந்த ஆயத்தஞ் செய்யும்போது, அவ்விடத்திற்கு ஒரு பிராமணன் பசியோடு வந்தான். உடனே இரந்திதேவர் அவனுக்கு வேண்டிய உணவைக் கொடுத்து அவனுடைய பசியைத் தீர்த்து மரியாதை செய்து அவனை அனுப்பினார். பின்பு எஞ்சியிருந்த உணவைச் சரிபங்காகப் பிரித்து ஒரு பங்கைத் தாம் எடுத்துக்கொண்டு மிகுதியை மற்றையவர்கள் உண்ணும்படி கொடுத்தார்.

அரசர் தமது பாகத்தை உண்ணத் தொடங்கும்போது, அவ்வழியால் ஒரு சூத்திரன் பசித்து வந்தான். இதை அறிந்த அரசர் அச் சூத்திரனுக்குத் தம்முடைய பங்கில் ஒரு பகுதியைக் கொடுத்து அவனுடைய பசியைத் தீர்த்து அனுப்பினார்.





பின்பு எஞ்சிய உணவில் ஒரு பிடியைத் தம்முடைய கையால் எடுத்து வாய்க்குக் கொண்டுபோகையில், ஒரு கூட்டம் நாயுங் கொண்டு ஒருவன் அதிகம் இளைத்துப் போய் அவரிருக்கும் இடத்துக்கு வந்தான். இரந்திதேவர் ஒரு மிடறு தண்ணீரை மாத்திரம் தமக்கு வைத்துக்கொண்டு மிகுதியை அவனுக்கும் நாய்களுக்கும் கொடுத்தார். அவன் நாய்களுடன் போய்விட்டான்.

எஞ்சிய தண்ணீரைக் குடித்தற்கு அவர் அண்ணாந்து பாத்திரத்தோடு உயர்த்துகையில், "ஐயா, தாகம் பொறுக்க முடியவில்லை; கொஞ்சத் தண்ணீர் கொடுங்கள்" என்று ஒரு சத்தம் அவர் காதில் விழுந்தது. அவர் திரும்பிப் பார்த்தார்; ஒரு புலையன் களைத்துத் தவித்துப்போய் நிலத்திலே கிடந்தபடி அவருடைய முகத்தையும் தண்ணீர்ப் பாத்திரத்தையும் ஆவலோடு பார்ப்பதைக் கண்டார்.

இரந்திதேவர் அவனைப் பார்த்தவுடன் மிகவும் பரிதபித்து, அவனுடைய தலையைத் தம்முடைய கையினால் உயர்த்திக்கொண்டு அவனுடைய வரண்டு காய்ந்த வாய்க்குள் தண்ணீரை விட்டார். அவருடைய அன்பான வார்த்தைகளே தண்ணீரிலும் பார்க்க

அவனுக்கு அதிகக் குளிர்ச்சியாயிருந்தன. அவன் தண்ணீரைக் குடிக்கையில், இரந்தி தேவர் இரண்டு கைகளையும் தம்முடைய தலையில் வைத்து மேலே பார்த்துக்கொண்டு "சிவபெருமானே, நான் அட்டமர்சித்தி களைப் பெறுதற்கு வரங் கேட்கவில்லை; சாயுச்சிய முத்தியை விரும்பவில்லை; உலகத்திலேயுள்ள சீவர்களெல்லாம் சுகமாய் இருக்கவேண்டும்; அவர்க ளுடைய வருத்தங்களை யெல்லாம் நான் உணர்ந்து அவ்வான்மாக்களுக்கு ஆறுதல் செய்யத்தக்கதாக எனக்குத் திருவருள் செய்யவேண்டும்; தாகத்தால் வருந்திய இந்த மனிதனுக்கு நான் குடிக்கவைத்த தண்ணீரைக் கொடுத்ததினால் அவனுடைய உயிர் பிழைத்தது. என்னுடைய தாகம் பசி நீங்கின; இளைப்பு நீங்கியது; எனக்கு ஆறுதல் உண்டாயிற்று" என்று வணங்கி நின்றார். இறைவன் அப்படியே அருள் செய்தார்.

சைவபோதம்

முதற் புத்தகம் முற்றிற்று.

———